# சிங்கைச் சிலேடை வெண்பா மாலை



*அகத்தியர் அருவி*


*ஆசிரியர்*

ஸ்ரீமாதவச் சிவஞான முனிவரின்

சிறியதந்தையாகிய

**நமச்சிவாயக் கவிராயர்**

*உரைவிளக்கம்*

குன்றக்குடி ஆதீனப்புலவர் தமிழாகரர்

**வித்துவான் க. கதிரேசன் எம்.ஏ; பி.எட்**

பூவாளூர் 621 712

அலைபேசி 098651 93754

## சிலேடை வெண்பா மாலை - தோரண வாயில்

சிங்கைச் சிலேடை வெண்பா மாலை என்னும் இந்நூல் பொதிகைமலையைச்சார்ந்த பாவநாசம் என்றுவழங்கும் விக்ரமசிங்கபுரத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு உமையம்மை என்னும் கல்யாணசுந்தரி உடனாய பாவநாசர் என்னும் கல்யாண சுந்தரப் பெருமான்மேல் இயற்றப்பெற்றதாகும். இதன் ஆசிரியர் திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச்சிவஞான யோகுகள் என்றும் போற்றப்பெறும் அருட்டிரு சிவஞான முனிவரின் சிறியதந்தையாராகிய **நமச்சிவாயக் கவிராயர்.** இவர் இயற்றியன: 1. சிங்கை உலகம்மை கலித்துறை அந்தாதி, 2. சிங்கை உலகம்மை பதிற்றுப்பத்தந்தாதி, 3. சிங்கை உலகம்மை கொச்சகக் கலிப்பா. 4. சிங்கை உலகம்மை சந்தவிருத்தம். 5. சிங்கை உலகம்மை பிள்ளைத் தமிழ். 6. சிங்கைச் சிலேடை வெண்பா.மாலை ஆகிய ஆறு நூல்களையும் இணைத்து, **”பாபநாசம் என்னும் சிங்கைப்பிரபந்தத் திரட்டு“** என்ற பெயரில் தமிழூர் நண்பர் பேராசிரியர் முனைவர் ச. வே. சுப்பிரமணியனார் வெளியிட்டுள்ளார்.

இவற்றில் இறுதியாக உள்ள சிங்கைச்சிலேடை வெண்பாவுக்கு உரைஎழுதித்தருமாறு 1998 இல் தமிழூர்ப் பேராசிரியர் நண்பர் ச. வே. சு அவர்கள், நண்பர் சிங்கம்புணரி புலவர் இலட்சுமணன் அவர்கள் மூலம் கேட்டுக்கொண்டபடி வழக்கம்போல் அதற்கு , சந்திபிரித்து, கூட்டுமுறை, குறிப்புரை பொழிப்புரை, விளக்கம், இலக்கணக்குறிப்பு ஆகிவற்றுடன் எழுதியனுப்பினேன். அதன் அச்சுப்படி நூல் எனக்குக் கிடைக்கவில்லை. அதனைப்பெறப் பாவநாசம் திருவள்ளுவர் கல்லூரி நண்பர் திரு. மு. வேல்முருகன் அவர்கள் மூலம் முயன்றபோது அவரது பெருமுயற்சியால் முன்குறித்த ஆறு நூல்களுடன் கூடிய பிரபந்தத் திரட்டே கிடைத்தது.

வெண்பாவின் இரண்டாமடியில் சிலேடைச்சொல் உள்ளது. மூன்று நான்காம் அடிகள் மடக்கடிகள் இவற்றுள் மடக்கடியை மடக்கடிபிரித்தல் என்றும் சிலேடைப்பகுதியைக் கூட்டுமுறை என்றும் எளிதில் புரிந்துகொள்ளத் தொடக்கத்திலே காட்டியுள்ளேன்.

மேலும் வழக்கம்போல் குறிப்புரை, பொழிப்புரை, விளக்கம், இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் எழுதி வலைத்தளத்தில் பதிவிட்டுள்ளேன். படித்து மகிழ்க.

அன்புடன்
வித்துவான். க. கதிரேசன் எம். ஏ; பிஎட்
குன்றக்குடி ஆதீனப்புலவர்

## பாவநாசம் என்னும் விக்ரமசிங்கபுரம்

# சிங்கைச் சிலேடைவெண்பா மாலை

**காப்பு**

கங்கைவெண்பா மாலைமுடிக் கல்யாண சுந்தரனார்
சிங்கைவெண்பா மாலை சிறப்பாகத் - தங்கியஎன்
கற்பகத்தின் கான்மலரைக் கட்டினன்நார் கொண்(டு)ஒருகைக்
கற்பகத்தின் கான்மலரக் கால்.

**கூட்டுமுறை** : கங்கைவெண்பா..........தங்கிய, கற்பகத்தின் கான்மலரை, ஒருகைக் கற்பகத்தின் கால்மலரக் கால் என்நார்கொண்டு கட்டினன்.

**குறிப்புரை** : கங்கை + வெண் + பா + மாலை + முடி = கங்கையாகிய தூய அழகிய + மாலையைச் + சூடிய. கல்யாணசுந்தரனார்= அருள்தரு கல்யாண சுந்தரப் பெருமான். சிங்கை வெண்பா மாலை= சிங்கை வெண்பா மாலை என்றநூல். சிறப்பாகத் தங்கிய= சிறப்பாக அமையும்பொருட்டு. கற்பகத்தின் கான்மலரை= கற்பகமரத்தின் மணக்கும் மலரை, ஒருகைக் கற்பகத்தின் கால்= ஒரேகையினையுடைய அருள்தரு கற்பக விநாயகரின் திருவடிகள். மலர= மனம் மகிழ. நார்கொண்டு கட்டினன்= அன்புடன் சூட்டினேன்.

**பொழிப்புரை** : கங்கையாகிய தூய அழகியமாலையை முடியில்சூடிய அருள்தரு கல்யாண சுந்தரருக்குரிய சிங்கை வெண்பா மாலைஎன்ற நூல் சிறப்பாக அமையும்பொருட்டுக் கற்பகமரத்தின் மணக்கும் மலரை, ஒருகையுடைய அருள்தரு கற்பக விநாயகரின் திருவடித்தாமரையில் என்அன்புநார் கொண்டு மனம்மகிழக் கட்டிச் சூட்டினேன்.

**இலக்கணக்குறிப்பு** : கங்கை வெண்பா மாலை - உருவகம். சூட்டிய= செயஎன்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

**நூல்**

1. பூங்கழனி மங்கையரும் புண்டரிகப் பொய்கைகளும்
தேங்க மலங்களையும் சிங்கையே - ஓங்கல்
வரிசிலை யானனத்தான் வான்நிமிர்ந்து காணும்
பரிசிலை யானனத்தான் பற்று.

**பின் ஈரடி ( மடக்கடி ) பிரித்தல் + கூட்டுமுறை** : அனத்தான் வான்நிமிர்ந்து காணும் பரிசு இல் ஐ ஆனனத்தான் ஓங்கல் வரிசிலையான் பற்று; பூங்கழனி தேம்கமலம் மங்கையர் களையும் சிங்கையே; புண்டரிகப் பொய்கைகளும் தேங்க மலம்களையும் சிங்கையே

**குறிப்புரை** : அனத்தான்= அன்னப்பறவையை ஊர்தியாகவுடைய பிரமன். வான்நிமிர்ந்து= வானில் உயரப்பறந்தும். காணும்பரிசு இல்= காணவியலாத. ஐ ஆனனத்தான்= ஐந்து முகமுடையவன் - சதாசிவ மூர்த்தி. ஓங்கல் வரிசிலையான்= மேருமலையை வில்லாக வளைத்தவன். பற்று= உரிமைஇடம். பூங்கழனி தேம்கமலம் மங்கையர் களையும் சிங்கை= பொலிவுவுடைய நன்செய்களில் (களையாகமலர்ந்த) தேன்பொருந்திய தாமரைமலர்களை மங்கையர் பறித்தெறியும் சிங்கை; புண்டரிகப் பொய்கைகளும் தேங்க மலம் களையும் சிங்கை =. தாமரைமலர்ந்த குளங்களும் மிக்க அழுக்குகளைப் போக்கும் சிங்கை.

**பொழிப்புரை** : அன்னப்பறவையை ஊர்தியாகவுடைய பிரமன், வானில் உயரப்பறந்தும் காணவியலாது விளங்கிய ஐம்முகமுடைய சதாசிவமூர்த்தி ஆகிய மேருமலையை வளைத்த சிவபிரான் உரிமையுடன் வாழும் இடம்; பொலிவுவுடைய நன்செய்களில் களையாக மலர்ந்த தேன்பொருந்திய

தாமரை மலர்களை மகளிர் களைவதும்; தாமரைமலர்கள் பூத்த குளங்கள் மிக்க அழுக்குகளைக் களைவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சதாசிவமூர்த்தியின் ஐந்துதிருமுகங்கள்: மேற்குநோக்கிய சத்யோசாதமுகம் வெண்ணிறத்தது; வடக்குநோக்கிய வாமதேவமுகம் செந்நிறத்தது; தெற்குநோக்கிய அகோரமுகம் கருநிறத்தது; கிழக்குநோக்கிய தத்புருடமுகம் பொன்னிறத்தது; உச்சிநோக்கிய ஈசானமுகம்பளிங்குநிறத்தது. நீராடுவோர் உடல் அழுக்கை நீரும், நீரில் கலந்த அழுக்கை நீரில்வளரும் தாமரையும் ( உரமாகக் கொண்டு )நீக்கும்

**இலக்கணக்குறிப்பு** : தேங்கமலம் - பிரிமொழிச்சிலேடை.

2. எவ்வழிநின் றுள்ளோரும் ஏழிசைய வண்டினமும்
செவ்வழியின் பண்புணரும் சிங்கையே - மைவழியும்
காவிக் கழுத்தினார் கஞ்சபத நெஞ்(சு)உறஇப்
பாவிக்க ழுத்தினார் பற்று.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : மைவழியும் காவிக்கழுத்தினார் கஞ்சபதம் நெஞ்சுஉற இப்பாவிக்கு அழுத்தினார் பற்று; எவ்வழிநின்றுளோரும் செவ்வழியின் பண்புஉணரும் சிங்கையே; ஏழிசைய வண்டினமும் செவ்வழியின் பண் புணரும் சிங்கையே.

**குறிப்புரை** : மைவழியும்= ( உண்டநஞ்சினால் ) கருமைவழியும். காவி= செங்குவளை மலர். கழுத்தினார்= கழுத்துடைய சிவபிரான்.. கஞ்சபதம்= தாமரைமலர்போன்ற திருவடி. நெஞ்சுஉற= உள்ளத்தில் பொருந்த. இப்பாவிக்கு அழுத்தினார்= இந்தப் பாவியாகிய எனக்குப் பதித்தவர். எவ்வழியில் நின்றுளோர்= எவ்வகை வாழ்க்கை முறையினரும். செவ்வழியின் பண்பு உணரும்= அறவழியின் பண்பினை உணர்ந்து நடக்கும். சிங்கை. ஏழிசைய= ஏழிசையுடைய. செவ்வழியின் பண் புணரும்= நெய்தல் திணைக்கு உரிய செவ்வழிப்பண் முரலும்.

**பொழிப்புரை** : கருமைவழியும் செங்காவிமலர் ஒத்த கழுத்தினையுடையவர், தனது செந்தாமரை போன்ற திருவடிகளை இந்தப்பாவியாகிய எனது நெஞ்சில்பதித்த சிவபிரான் உரிமையுடன் வாழும் இடம்; எவ்வகை வாழ்க்கை முறையினரும் அறவழியின் பண்பினை உணர்ந்து நடப்பதும், ஏழிசை முரலும் வண்டுகள் நெய்தல் திணைக்குரிய செவ்வழிப்பண் முரல்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செவ்வழியின் - செம்மொழிச்சிலேடை, பண்புணரும் - பிரிமொழிச்சிலேடை.

3. கல்விக் குரவரும்மென் கார்க்குரவக் கோதையரும்
செல்விக் கினமடுக்கும் சிங்கையே - நல்வித்
துரும வரையினார் சோதியர்சார் தூலச்
சரும வரையினார் சார்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : நல் + வித்துரும + வரையினார்; சோதியர்சார் + துல சரும + வரையினார் சார்பு; கல்விக்குரவரும் + செல்விக்கு+ இனம் அடுக்கும் சிங்கையே; கார்க்குரவக் + கோதையரும் + செல்விக்கு * இனம்அடுக்கும் சிங்கையே.

**குறிப்புரை** : நல் வித்துரும வரையினார்= நல்ல பவளமலை போன்ற திருமேனியர் -. சிவபிரான் . சோதியர்சார்= ஞானியர் சென்றடையும். தூலச்சருமம்= ஆகாயம்போன்ற. வரையினார்= எல்லையற்றவர். திருமேனி - அருவத்திருமேனி. சார்பு=சார்ந்துள்ள இடம்.

கல்விக்குரவர்= கற்பிக்கும் ஆசிரியர்கள். செல்விக்கு இனம் அடுக்கும்= திருமகளுக்குச் சுற்றமாகப் செல்வத்தால் பொருந்தும். கார்க் குரவக் கோதையர்= கரிய மணக்கும் கூந்தலுடயமகளிர். செல்விக்கு இனம் அடுக்கும்= திருமகளுக்குச்சுற்றமாக அழகால் பொருந்தும்இடம்

**பொழிப்புரை** : நல்ல பவளமலை போன்ற சிவந்ததிருமேனியரும், ஞானியர் சென்றடையும் ஆகாயம் போன்ற அருவத்திருமேனியரும் ஆகிய சிவபிரான் சார்ந்துள்ள இடம்; கற்பிக்கும் ஆசிரியர்கள் செல்வத்தால் திருமகளுக்கு சுற்றமாகும் இடமும்; கரியதும் மணப்பதும் ஆகிய கூந்தலுடைய மகளிர் அழகால் திருமகளுக்குச் சுற்றமாகும் இடமும் சிங்கையேயாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செல்விக்கு இனம் அடுக்கும் - செம்மொழிச்சிலேடை.

4. மாலைக் குழல்மடவார் வாள்விழியும் மாளிகையும்
சேலைக் கொடிதிகழும் சிங்கையே - ஆலைக்
கரும்பனைக்கா யங்கெடுத்தார் காலாந்த ரத்(து)ஆடல்
விரும்பனைகா யங்கெடுத்தார் வீடு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஆலைக் கரும்பனைக் காயம் கெடுத்தார்; காலாந்தரத்து ஆடல் விரும்பு அனைக்கு ஆயம் கெடுத்தார் வீடு; மாலைக்குழல் மடவார் வாள்விழியும் சேலைக் கொடி திகழும் சிங்கையே; மாளிகையும் சேலைக்கொடி திகழும் சிங்கையே.

**குறிப்புரை** : ஆலைக் கரும்பன்= நீர் - சாறு உடைய கரும்பேந்திய மன்மதன். காயம் கெடுத்தார்= உடம்பை எரித்தவர். கால அந்தரம்= கடைஊழியில். ஆடல்விரும்பு அனைக்கு ஆயம் கெடுத்தார்= கூத்தாட விரும்பிய பராசத்தியின் சுற்றத்தை ஒடுக்கியவர். வீடு= இருப்பிடம்

மாலைக்கு உழல்மடவார்= மாலைநேரம் வரவில்லையே என்று வருந்தும் மகளிரின் வாள்விழி= ஒளிபொருந்திய விழி. சேலைக் கொடி திகழும்= கெண்டைமீன்போல் நீண்டு விளங்கும். மாளிகையும் சேலைக்கொடி திகழும்= மாளிகைகள் துணிக்கொடி பறக்க விளங்குவதும்

**பொழிப்புரை** : சாறுடைய கரும்பேந்திய மன்மதனின் உடம்பை எரித்தழித்தவரும், கடைஊழியில் ஊழிக்கூத்தாட விரும்பிய பராசத்தியின் சுற்றத்தையும் தன்னுள் ஒடுக்கியவருமாகிய சிவபிரான் வாழும் ஊர்; மாலைநேரம் வரவில்லையே என்று ( கணவனின் வருகைக்காக ) வருந்தும் மகளிரின் ஒளிபொருந்திய விழிகள் கெண்டைமீன்போல் நீண்டுகாதளாவச்செல்வதும், துணிக்கொடிகள் பறக்கும் மாளிகைகள் உடையதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : கடைஊழியில் பராசத்தியும், அவளது சுற்றமாகிய அனைத்து உயிரினங்களும் தன்னுள் ஒடுங்க, கூத்தாடும் தான்மட்டும் தனித்தநிலையினன் என்பதைக் கலித்தொகைக் கடவுள்வாழ்த்துச் செய்யுள் குறிக்கும். இதனை மனோன்மணீயம் சுந்தரனார்,

" கடைஊழி வரும்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையானுன் வாசகத்தின் ஒருபிரதி கருதினதே "

என்று குறிப்பார்.

**இலக்கணக்குறிப்பு** : சேலைகொடி திகழும் - செம்மொழிச்சிலேடை. கரும்பனை - வினையாலணையும் பெயர். அனை= இடைக்குறை.

5. வெவ்வாம் பரிமுகமும் மெல்லியலார் மெல்இதழும்
செவ்வாம் பலம்கொடுக்கும் சிங்கையே - கைவாங்(கு)
ஒருகனக வில்லான் உயர் இமய வேந்தன்
மருகனக வில்லான் மனை.

**மடக்கடிபிரித்தல் + கூட்டுமுறை** : கைவாங்கு ஒருகனக வில்லான், உயர்இமயவேந்தன் மருகன் அகவு இல்லான் மனை; வெவ்வாம் பரிமுகமும் செவ் ஆம் பலம்கொடுக்கும் சிங்கையே; மெல்லியலார் மெல்இதழும் செவ் ஆம்பல் அம் கொடுக்கும் சிங்கையே.

**குறிப்புரை** : கைவாங்கு= கையில் எடுத்த, ஒருகனகவில்லான்= ஒப்பற்ற மேருமலையாகிய வில்லுடையவன். மருகன்= மருமகன். அகவு இல்லான்= துணைக்கு யாரையும் அழைக்காதவன். மனை= வீடு. வெவ் ஆம்= வெப்பம்மிக்க. பரிமுகம்= அசுவமேதவேள்வி. செவ்ஆம் பலம்கொடுக்கும்= மிக்கதான பலனைத்டரும். மெல் இதழ்= மென்மையான உதடு. செவ் ஆம்பல் அம் கொடுக்கும்= செவ்வாம்பல் மலருக்கு அழகைத் தரும்

**பொழிப்புரை** : கையில் ஏந்திய ஒப்பற்ற மேருமலையாகிய வில்லுடையவனும், இமயமலை அரசன் இமவானுக்கு மருமகனாய் இருந்தும் முப்புரளரிக்கு யாரையும் துணைக்கு அழைக்காதவனும் ஆகிய சிவபிரானின் வீடு; வெப்பம்மிக்க அசுவமேதவேள்வி செம்மையான - மிக்க - பலன்கொடுப்பதும், மகளிரின் மென்மையான உதடுகள் செவ்வாம்பல் மலருக்கு அழகுதருவதும் ஆகியசிங்கையாகும்.

**விளக்கம்** : சிவபிரான் வித்யுன்மாலியின் பொற்கோட்டை, தாருகாட்சனின் வெள்ளிக்கோட்டை, கமலாட்சனின் இரும்புக்கோட்டை ஆகிய முப்புரம்எரிக்கப்புறப்பட்டபோது, பூமியைத் தேராக, சூரிய சந்திரரைத்தேர்ச் சக்கரமாக மேருமலையை வில்லாக, திருமாலை அம்பாகக் கொண்டு புறப்பட்டான். உதவிக்கு வந்தவர்கள் தாமில்லாவிட்டால் முப்புரளரிக்கு வாய்ப்பில்லை என்று செருக்குற்றதால் யாரையும் பயன்படுத்தாமல் தன் புன்சிரிப்பால் முப்புரங்களையும் எரித்தான் என்றபுராணச்செய்தியை உட்கொண்டது " அகவு இல்லான் " என்றதொடர்.

**இலக்கணக்குறிப்பு** : செவ்வாம்பலம் - பிரிமொழிச்சிலேடை .

6. வெம்பருமண் கூனும்மத வெங்களிறும் தண்நறவார்
தீம்பருவப் பாகிவரும் சிங்கையே - கூம்பநிலா
விட்ட விருந்துண்பார் விருப்பால் புனிதவதி
இட்ட விருந்துண்பார் இடம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : கூம்ப நிலா விட்ட விருந்து உண்டார், விருப்பால் புனிதவதி இட்ட விருந்து உண்பார் இடம், வெம் பரு மண் கூன் தீம்பர் உவப்பாகிவரும் சிங்கையே; வெங்களிறும் தண் நறவு ஆர் தீம்பர் உவப்பாகி வரும் சிங்கையே.

**குறிப்புரை** : ( சாக்கியநாயனார் )கூம்ப= குவியலாக. நிலா= நில்லாது - இடைவிடாது. விட்ட= எறிந்ததை - எறிந்த கல்லினை. விருந்து உண்பார்= புதுமையாக ஏற்றவர். விருப்பால்.............உண்பார் = விருப்புடன் புனிதவதியார் இட்ட விருந்தை. வெம் பரு மண்= வெந்த பெரிய வயல். கூன்= நத்தை. தீம்பர்= இனிமையுடன். உவப்பாகிவரும்= பொலிவுபெற்றுவரும். வெங்களிறும்= கொடியஆண்யானையும். தண்= இழிந்த. நறவு ஆர் தீம்பர்= கள்குடித்து தீம்பாக. உவப்புஆகி வரும்= வெறி - மதம்கொண்டுவரும்.

. **பொழிப்புரை** : சாக்கியநாயனார் குவியலாகுமாறு இடைவிடாது எறிந்த கற்களைப்புதுமையான முறையில் மலர்களாக ஏற்றவரும்; காரைக்கால் புனிதவதியார் மாங்கனியோடு இட்ட விருந்தினை ஏற்றவரும் ஆகிய சிவனுறையும் இடம்; தீயால்வெந்த பெரியவயலில் வாழ்ந்த நத்தைகள் உண்ண இனிதாகிவருவதும்; கொடிய ஆண்யானை இழிந்த கள்குடித்து வெறிகொண்டு வருவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சாக்கியநாயனார் நாடோறும் கல்லெறிந்து வழிபடல் :

" நாடோறும் சிவலிங்கம் கண்டு உண்ணும் அதுநயந்து
மாடுஓர்வெள் ளிடைமன்னும் சிவலிங்கம் கண்டுமனம்
நீடுஓடு களிஉவகை நிலைமைவரச் செயல்அறியார்
பாடுஓர்கல் கண்டுஅதனைப் பதைப்போடும் எடுத்துஎறிந்தார் " ( பெரியபு. 3649 )

காரைக்கால் அம்மையார் சிவனடியாக்கு இட்ட மாங்கனி விருந்து :

" இல்லாளன் " வைக்க ", எனத்தம்பக்கல் முன்இருந்த
நல்லநறு மாங்கனிகள் இரண்டில் ஒன்றைக் கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினால்
அல்லல்தீர்ப் பவர்அடியார் தமைஅமுது செய்வித்தார். " ( பெரியபு. 1741 )

**இலக்கணக்குறிப்பு** : தண் நறவார் தீம்பருவப்பாகிஆகிவரும் - பிரிமொழிச்சிலேடைச்சொல்.

7. ஆய்உத் தமர்நாவும் அந்தணஓ மக்குழியும்
தேயுத் தரமாற்றும் சிங்கையே - நோயுள்
படிந்தவனா கப்பணியான் பாவிஎன்பால் இன்னல்
கடிந்தவனா கப்பணியான் காப்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : நோயுள் படிந்தவனாகப் பணியான், பாவிஎன்பால் இன்னல் கடிந்தவன் நாகப்பணியான் காப்பு; ஆய் உத்தமர் நாவும் தே உத்தரம் ஆற்றும் சிங்கையே; அந்தணர் ஓமக்குழியும் தேயுத் தரம் ஆற்றும் சிங்கையே.

**குறிப்புரை:** நோயுட்படிந்தவனாக= ஆணவமலத்தில் மூழ்கியவனாக. பணியான்= விதிக்காதவன். இன்னல் கடிந்தவன் நாகபணியான்= துன்பம் தீர்த்தவனாய் நாகத்தை அணிகலனாகக் கொண்டவன். காப்பு= காக்கும் ஊர். ஆய் உத்தமநாவும்= ஆராய்ந்தும்கூறும் சான்றோர் நாக்கு. தே உத்தரம் ஆற்றும்= தெய்வத்தின் சொல்போல் பலன்தருவதும்; ஓமக்குழி= வேள்விக்குழி. தேயு= தீயின். தரம் ஆற்றும்= தீயின் தரத்துடன் திகழும். .

**பொழிப்புரை** : பாவியாகிய என்னை ஆணவமலத்தில் மூழ்கியவனாக விதிக்காதவனும், பாவியாகிய எனது துன்பம்தீர்த்தவனாய் நாகத்தை அணிகலனாகக் கொண்டவனும் ஆகிய சிவன் காக்கும் ஊர்; ஆராய்ந்து கூறும் சான்றோர் நாக்கு தெய்வத்தின் சொல்போல் பலன் தருவதும்; அந்தணர்களின் வேள்விக்குழி தீயின் தரத்துடன் திகழ்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தேயுத் தரமற்றும் - பிரிமொழிச்சிலேடை.

8. மல்லியைந்த தோளினரும் வான்அசுணப் புள்ளினமும்
சில்லியந்தே ரச்சடைக்கும் சிங்கையே - சொல்லின்இரு
கான மயிலார் கறிசமைத்த பிள்ளைவரப்
போன மயிலார் புரம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை றை** : சொல்லின் இருகானமயிலார் கறிசமைத்த பிள்ளைவரப் போனம் அயிலார் புரம்; மல் இயைந்த தோளினரும் சில்லியம் தேர்அடைக்கும் ( தேர் சில்லியம் அடைக்கும் என்க ) சிங்கை; வான்அசுணப் புள் இனமும் சில்இயம் தேர அடைக்கும் சிங்கை.

**குறிப்புரை** : சொல்லின் இரு கான மயிலார் - கானச் சொல்லின் இருமயிலார்= பேச்சில் இசைப்பாட்டுப்போல் பேசும் இரு மயில் ஒத்தவர்கள் ( வெண்காட்டு நங்கையும் சந்தனத்தாதியும் ). கறிசமைத்த பிள்ளை= கறியாகச் சமைக்கப்பெற்ற சீராளன். வர= வரும்பொருட்டு. போனம் அயிலார்= உணவு உண்ணாத அடியவராகிய சிவபிரான். மல் இயைந்த= மற்போருக்குப் பொருத்தமான. சில்லியம்= இரும்பு அச்சு. தேர் அடைக்கும்= தேர் நகராமல் செய்யும். வான் அசுணப் புள்இனம்= பெருமைபொருந்திய அசுணப்பறவை இனம். சில் இயம்= அற்பஇசை. தேரச் சடைக்கும்= கேட்டு மயங்கும்.

**பொழிப்புரை** : பேச்சில் இசைப்பாட்டுப்போல் பேசும் மயில்போன்ற வெண்காட்டுநங்கை, சந்தனத்தாதியார் ஆகிய இருவராலும் கறியாகச்சமைக்கப்பட்ட சீராளன் மீண்டுவரும்பொருட்டு உணவை உண்ணாத அடியவராகிய சிவபிரானின் ஊர்; இரும்பாலான அச்சுடைய தேர் நகராமல் செய்யும் மற்போருக்குப் பொருத்தமான தோளுடையவர் வாழ்வதும்; அற்பஇசை கேட்டு மயங்கும் பெருமைபொருந்திய அசுணமா இனம் வாழ்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : வெண்காட்டு ந ங்கை, சந்தனத்தாதியார் இருவரும் சமைத்ததால் துண்டுபட்ட சீராளனின் உடம்பை, பைரவராகவந்த அடியாகிய சிவபிரான் உண்ணாமையைத் திருத்தொண்டர்புராணம் சிறுத்தொண்டநாயனார் புராணத்தில் காணலாம்.

நல்லிசைகேட்டு மகிழ்ந்துகொண்டிருக்கும் அசுணமா, திடீரென்று கொடிய இசைகேட்டதும் மயங்கி விழும் என்பர்.

9. நித்திலத்தால் சோ(று)அடுபொன் நீர்மையரும் பாவலரும்
சித்திரப்பா வைக்கூட்டும் சிங்கையே - அத்திரத்தால்
சோர விலங்கையினான் சோரவென்ற வாளிதொடப்
பார விலங்கையினான் பற்று.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : அத்திரத்தால் சோர இலங்கையினான் சோர; வென்ற வாளிதொடப் பாரவில் அங்கையினான் பற்று; நித்திலத்தால் சோறுஅடு பொன்நீர்மையரும் சித்திரப்பாவைக்கு ஊட்டும் சிங்கை; பாவலரும் சித்திரப் பாவைக்கூட்டும் சிங்கையே.

**குறிப்புரை** : அத்திரத்தால்= கயிலை மலையால். சோர= வஞ்சனையான. இலங்கையினான் சோ= இராவணன் சோர்வடைய.. வென்றவாளி தொட= வெல்லும் அம்பினைத் தொடுக்க. பாரவில் = பாரமான மேருமலையாகிய வில். அங்கையினான்= அழகிய கையில் ஏந்தியவன். பற்று= தங்கியுள்ள ஊர். நித்திலம்= முத்து. சோறு அடு= சோறாக்கும். பொன்நீர்மையர்= திருமகளை ஒத்த மகளிர். சித்திரப் பாவைக்குஊட்டும்= அழகிய பதுமைக்குச் சோறு ஊட்டும். பாவலர்= பாடல் எழுதவல்லவர்கள். சித்திரப்பாவை= சித்திரகவிதையை. கூட்டும்= எழுதும்.

**பொழிப்புரை** : கயிலைமலையால் வஞ்சனையான இராவணன் சோர்வடையச்செய்தவனும் ; வெற்றிபொருந்திய அம்பினைத் தொடுக்க, பாரமான மேருமலையை அழகியகையில் ஏந்தியவனுமாகிய சிவபிரான் தங்கியுள்ள ஊர்; முத்தினால் சோறுஆக்கும் திருமகளைஒத்த அழகுடைய மகளிர்,சோற்றினைத் தமது அழகிய பதுமைக்கு ஊட்டுவதும், பாடல் எழுதவல்லவர்கள் சித்திரகவிதை எழுதுவதும் சிங்கையில் ஆகும்.

**விளக்கம்** : கயிலையை எடுக்கமுயன்ற இராவணன் சோர்ந்தது :

" பரப்பு நீர்இலங் கைக்க இறை வன்அவன்
உரத்தி னால்அடுக் கல்எடுக் கல்உற
இரக்கம் இன்றி இறைவிர லால்தலை
அரக்கி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. ( திருமுறை 5. திருக்கடம்பூர். 10 )

பாரவில் அங்கையினான் : :
"அமரகத்துப், பொன்மேருவில்லியை எதிர்ப்பட்ட ஞான்று " ( மீ.பி.த. சப்பாணி. 2 )

**இலக்கணக்குறிப்பு** : சித்திரப்பாவைக்கூட்டும் - பிரிமொழிச்சிலேடை

10. கொப்புக் குழையார்கொங் கைக்குடமும் மட்குடமும்
செப்புக் குடம்பழிக்கும் சிங்கையே - துப்புப்
பழுக்கும் இதழியோர் பாகர் பசுந்தேன்வாய்
ஒழுக்கும் இதழியோர் ஊர்

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : துப்புப் பழுக்கும் இதழி ஓர்பாகர், பசுந்தேன்வாய் ஒழுக்கும் இதழியோர் ஊர்; கொப்புக்குழையார் கொங்கைக்குடமும் செப்புக்குடம் பழிக்கும் சிங்கை; மண்குடமும் செப்புக்கு உடம்பு அழிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : துப்புப் பழுக்கும்= பவளமும் வெளிரும். இதழி = உதடு உடையவள். ஓர்பாகர்= இடப்பாகம் உடையவர் - சிவபிரான். ஒழுக்கும்= ஒழுகும். இதழியொர்= கொன்றை சூடியவர். கொப்புக் குழையார்= கொப்புஎன்ற அணிஅணிந்த காதினர் மகளிர். கொங்கைக்குடம்= முலைகளாகிய குடங்கள். பழிக்கும்= இழிவாகப்பேசும். செப்புக்கு உடம்பு அழிக்கும்= உடம்பை அழித்துக்கொள்ளும்.

**பொழிப்புரை** : செம்பவளமும் வெளிருடையது என்று கூறுமாறு சிவந்தஉதடுகளுடைய அம்மையை இடதுபாகம் கொண்டவனும், வளமான தேனை தன்னிடம் ஒழுகச்செய்யும் கொன்றைமாலை சூடியவனுமாகிய சிவன் உறையும் ஊர், கொப்புஎன்ற அணிகலன் அணிந்த காதுடைய மகளிரின் முலைகளாகிய குடங்கள் செம்பினாலான குடங்களைபழிப்பதற்கு இடமானதும், மண்ணாலான குடங்கள் செம்பினாலான குடம்கண்டு தம்மை உடைத்துக் கொள்வதற்கு இடமானதுமான சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செப்புக்குடம்பழிக்கும் - பிரிபொழிச்சிலேடை.

11. காந்த ரொடும்புணர்ந்தார் கண்களும்அக் காளையரும்
சேந்த னலம்படரும் சிங்கையே - பூந்துளவ
வாரிசவா சத்தார் வனைந்தார் தொழும்மலைய
பாரிசவா சத்தார் பதி.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : பூந்துளவ வாசத்தார், வாரிச வாசத்தார், மலைய பாரி வாசத்தார் வனைந்தார் தொழும் பதி; காந்தரொடும் புணர்ந்தார் கண்கள் சேந்து அனல் அம் படரும் சிங்கையே; அக்காளையரும் சேந்தன் நலம்படரும் சிங்கையே.

**குறிப்புரை** : பூந்துளவ வாசத்தார்= அழகிய துளசி மணமுடையவரும் - திருமாலும். வாரிச வாசத்தார்= செந்தாமரையில் வாழ்கிறவரும் - பிரமனும். மலய பாரிச வாசத்தார்= பொதிகைமலைப் பக்கம் வாழ்பவரும் - அகத்தியர். வனைந்தார் பதி= வனைந்தவரான சிவபெருமான் வாழ்விடம்; காந்தரொடும் கணவனொடு. சேந்து அனல் அம்படரும்= சிவந்து நெருப்புப்போன்று சிவந்து அழகுபெறும்.அக்காளையரும்= தம்மனைவியைக் கூடிய காளையராகிய கணவரும். சேந்தன் நலம்படரும்= முருகப்பெருமானின் அழகு பெற்ற.

**பொழிப்புரை** : அழகிய துளசிமணம் கமழ்பவராகிய திருமால், செந்தாமரையில் வாழ்கின்ற பிரமன், பொதிகைமலையின் பக்கம் வாழும் அகத்தியர், முதலியோர் வணங்கும் அவர்களை வனைந்த சிவபிரான்

வாழும்பதி; தம்கணவரொடு கூடியமனைவியர் கண்கள் சிவந்து நெருப்புப்போல் அழகுடன் விளங்கும் இடமும், தம்மனைவியைக்கூடிய காளையாகிய கணவர் முருகப்பெருமானின் அழகுடன் விளங்குமிடமும் சிங்கையாகும்.

**விளக்கம் :** கலவியால் கண் உதடு ஆகிய நிறமாற்றம் பெறும்.

" வாயின் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்க
தோயக் கலவி அமுதளிப்பீர் துங்கக் கபாடம் திறமினோ " ( கலிங்கத்துப்பரணி. கடை. )

12. கற்பநிலை வேட்டார் கருத்துமனைப் பித்திகையில்
சிற்பரைவண் ணங்குறிக்கும் சிங்கையே - பொற்பின்
விலங்கல் குடையார் விதிமுதலோர் சென்னி
அலங்கற் குடையார் அகம்

**மடக்கடிபிரிப்பு + கூட்டுமுறை** : பொற்பின் விலங்கல் குடையர் விதி முதலோர் அலங்கற்குஉடையார் அகம் ; கற்பநிலை வேட்டார் கருத்து சிற்பரை வண்ணம் குறிக்கும்சிங்கை ; மனைப் பித்திகையில் சிற்பர் ஐ வண்ணம்குறிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : பொற்பின்= பொலிவுடன். விலங்கல் குடையார்= கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தவர் - கண்ணபிரான் - திருமால்.விதி= நான்முகன். தலையோடுகளை. அலங்கற்கு உடையார்= மாலையாக அணிந்தவர் - சிவபிரான். அகம்= வீடு. கற்பநிலை= அழிவில்லாத முத்திநிலை. வேட்டார்கருத்து= விரும்பியவர் மனம். சிற்பரை - சித்பரை= ஞானசத்தியாகிய அம்மையை. வண்ணம் குறிக்கும்= எழிலைக் குறிக்கொள்ளும் . மனைப்பித்திகையில்= வீட்டுச்சுவரில். சிற்பர்= சிற்பிகள். ஐவண்ணம்= வியக்கத்தக்க அழகுடன். குறிக்கும்= தீட்டும்.

**பொழிப்புரை** : பொலிவுடன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த கண்ணனாகிய திருமால், நான்முகன் ஆகியோருடைய மண்டையோட்டை மாலையாக அணிந்தவர் வீடு ; அழிவில்லாத முத்திநிலையை விரும்பியவர் மனத்தில் ஞானசத்தியாகிய அம்மையின் எழிலைக் குறிக்கொள்ளும் சிங்கையாகும்; வீட்டுச்சுவர்களில் சிற்பிகள் வியக்கத்தக்க வண்ணச்சிற்பங்கள் அழகுடன் அமைக்கப்பெற்ற சிங்கையாகும்.

**விளக்கம்** : சிவபிரான், திருமால் நான்முகன் ஆகியோர் மண்டைஓட்டினையும் எலும்புக் கூட்டினையும் மாலையாக அணிந்து கொண்டது :

" நங்காய் இதுஎன்னதவம் நரம்போடு எலும்பு அணிந்து
கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்துஇருவர்
தங்காலம் செய்யத் தரித்தனன் காண்சாழலோ." ( திருவாச 265. )

கங்காளம்= முழுஎலும்புக்கூடு. தம்காலசெய்ய= மால் அயன் காலத்தை வரையறை செய்ய )

" தாரகைபோலும் தலைத்தலை மாலைத் தழலாரப் பூண்வீர " ( திருவாச. 152 )

13. விம்புமலர் பூங்கொத்தும் வித்துரும வாய்ச்சியரும்
செம்மலைமாற் றத்(து)அழைக்கும் சிங்கையே - கைம்மலரில்
துள்ளுமறி வைத்திருப்பார் தொண்டுபுரி யார்க்(கு)இருள்வாய்
தள்ளுமறி வைத்திருப்பார் சார்பு.

**மடக்கடிபிரித்தல் + கூட்டுமுறை** : கைம்மலரில் துள்ளும்மறி வைத்து இருப்பார், தொண்டுபுரியார்க்கு இருள்வாய்த்தள்ளும் அறிவைத் திருப்பார் சார்பு; விம்புமலர்ப் பூங்கொத்தும் செம்மலை மாற்றத் தழைக்கும் சிங்கையே; வித்துரும வாய்ச்சியரும் செம்மலை மாற்றத்து அழைக்கும் சிங்கையே.

**குறிப்புரை** : கைம்மலரில்= கையாகிய மலரில். துள்ளும்மறி= துள்ளிப்பாயும்மான்கன்று. வைத்திருப்பார்= ஏந்திய சிவபிரான். இருள்வாய்த்தள்ளும்= துன்ப இருளில் தள்ளும். அறிவைத் திருப்பார்= எண்ணத்தை மாற்றிக்கொள்ளாதவர் - சிவபிரான். விம்பு மலர் பூங்கொத்து= பாக்குமரத்தில் மலர்ந்த மலர்க்கொத்து. செம் மலை= சிவந்த மண்ணின் ஈட்டத்தை. மாற்றத்து அழைக்கும்= மாற்றுமாறு -உழுமாறு அழைக்கும். வித்துரும வாய்ச்சியர்= பவளம்போன்ற உதடுடைய மகளிர். செம்மலை= கணவரை. மாற்றத்து= சொல்லால். அழைக்கும்= கூப்பிடும்.

**பொழிப்புரை** : கையாகிய மலரில் துள்ளிப்பாயும் மான்கன்றை வைத்திருப்பவரும், யார்க்கும் தொண்டுசெய்யாதவர்களைத் துன்பஇருளில் தள்ளும் தனது எண்ணத்தை மாற்றிக்கொள்ளாதவரும் ஆகிய சிவபிரான் சார்ந்துள்ள ஊர்; பாக்குமரத்தில் மலர்ந்த மலர்க்கொத்து சிவந்த - காய்ந்துபோன - மண்ணின் ஈட்டத்தை உழுது மாற்றுமாறு / நீர்பாய்ச்சி மாற்றுமாறு அழைக்குமிடமும்; பவளம்போல்சிவந்த உதடுகளுடைய மகளிர் தம் கணவரைப் பெயர்கூறி அழைக்குமிடமும் ஆகிய சிங்கையாகும்.

14. மிக்க சிறைமயிலும் மென்பயிர்க்குத் தீம்புனலும்
செக்கணியா டிக்களிக்கும் சிங்கையே _ முக்கண்
ஒருவ ருமாபதியார் உன்னிலர்பால் ஞானத்(து)
இருவருமா பதியார் சார்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : முக்கண் ஒருவர் உமாபதியார் உன்னிலர்பால் ஞானத்து இருவருமா பதியார் சார்வு; மிக்க சிறைமயில் செக்கணி ஆடிக்களிக்கும் சிங்கை; தீம்புனலும் செக்கு( செய்க்கு) அணி ஆடிக்களிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : ஞானத்து= ஞானத்தால். உன்னிலர்பால்= நினைக்காதவரிடம். முக்கண் ஒருவர் உமாபதியார்= மூன்று கண்கள் கொண்டவராகிய ஒப்பற்ற சிவபிரான். இருவருமா= அம்மையும் அப்பனுமாகிய இருவரும். பதியார்= மனத்தில் இடம்கொள்ளார். சார்வு= வாழுமிடம். சிறை= தோகை. செக்கணி= செக்கணி என்னும் ஒருவகைக்கூத்து. செக்கு - செய்க்கு= நன்செய்க்கு. அணி= அணிசேர்க்க. ஆடிக்களிக்கும்= ததும்பிக்களிக்கும்.

**பொழிப்புரை** : ஞானத்தால் நினைக்காதவர் உள்ளத்தில், முக்கண்களுடையவராகிய ஒப்பற்ற சிவபிரானும், அம்மையும் அப்பனும் ஆகிய இருவருமே தங்காதவர்கள் சார்ந்துள்ள ஊர்; மிக்கதோகையுடைய மயில் செக்கணி என்ற நடனமாடிக்களிப்பதும், மென்மையான பயிரின்பொருட்டு வளமான நீர் நன்செய்யின்கண் ததும்பிக்களிப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீம்புனலுக்கு கொள்ளும் போது **செக்கண்** என்பது செய்க்கண் என்பதன் இடைக்குறையாகும்.

15. கோட்டரும் பொன்மதிலும் கோடா இளையவரும்
சேட்டருக்கன் பாற்றிவரும் சிங்கையே - தோட்டெருக்கந்
தண்ணந் தெரியலார் சத்தியவே தாந்தமும்தம்
வண்ணம் தெரியலார் வாழ்வு.

**மடக்கடிப்பிரிப்பு + கூட்டுமுறை** : தோடு எருக்கம் தண்ணம் தெரியலார், சத்திய வேதாந்தமும் தம்வண்ணம் தெரியலார் வாழ்வு; கோடுஅரும் பொன்மதில் சேட்டு அருக்கன் பாற்றிவரும் சிங்கை. கோடா இளையவர் சேட்டருக்கு அன்பு ஆற்றிவரும் சிங்கை.

**குறிப்புரை** : தோடு எருக்கம் தண்ணம் தெரியலார்= இதழ்களுடைய எருக்கம்பூவாலான தண்ணிய மாலையணிந்த சிவபிரான், சத்திய வேதாந்தம்= சத்திய வாக்காகிய உபநிடதம். தன்வண்ணம் தெரியலார்= தனது வடிவத்தை அறியவியலாதவர் - சிவபிரான். அரும் கோடு= உயரமான் உச்சி. பொன்மதில்= அழகிய மதில். சேட்டு= செந்நிறமுடைய.அருக்கன்= சூரியன். பாற்றிவரும்= ஒதுக்கி, ஒதுங்கி வரும். கோடா இளையர்= நெறிபிறழா இளையவர்கள். சேட்டருக்கு= மூத்தவர்களுக்கு. அன்பு ஆற்றிவரும்= அன்புசெலுத்தி வரும்.

**பொழிப்புரை** : இதழ்களுடைய தண்ணிய எருக்கமாலை அணிந்தவரும், சத்தியவாக்காகிய உபநிடத்தாலும் தனது வடிவத்தை அறியமுடியாதவருமாகிய சிவபிரான் வாழுமிடம்; உயரமான உச்சியைப் பெற்ற அழகிய மதிலைச் செந்நிறமுடைய சூரியன் கடக்கமுடியாமையால் ஒதுக்கி ஒதுங்கிவருவதும்; நெறிபிறழா இளையவர் தம்மின் மூத்தவர்பால் அன்புச்செயல் புரிவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : தோட்டெருக்கந் தண்ணம் தெரியலார் :

" நல்லவும் தீயவும் அல்ல குவிஇணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு " ( புறம். 106 )

வேதம் உபநிடதம் முதலியவற்றால் அறியப்படாதவன் சிவபிரான் :

" வேதங்கள், ஐயா எனஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே "( சிவபுரா.34- 35 )

**இலக்கணக்குறிப்பு** : சேட்டருக்கன் பாற்றிவரும் - பிரிமொழிச்சிலேடை.

16. கட்டாம் பகைப்புலத்தும் காலம்உணர்ந் தோர்கருத்தும்
திட்டாந் தரம்தெரியும் சிங்கையே - எட்டாம்
திசைக்கலிங்கத் தார்வார் திசைப்பொருநை மான்போற்
றிசைக்கலிங்கத் தார்வார் இடம்.

**மடக்கடிபிரித்தல் + கூட்டுமுறை** : எட்டு ஆம் கலிங்கத்து ஆர்வார், திசைப்பொருநைமான் போற்றிசைக்க லிங்கது ஆர்வார் இடம்; கட்டுஆம் பகைப்புலத்தும் திட்டாந்தரம் தெரியும் சிங்கை; காலம் உணர்ந்தோர் கருத்தும் திட்டாந்தரம் தெரியும் சிங்கை.

**குறிப்புரை** : எட்டுஆம் கலிங்கத்து ஆர்வார்= எட்டுத்திசையாகிய ஆடை உடுத்துகிறவர். திசை= நோக்கும். பொருநைமான்= பொருநையாற்றுக்குரிய மான்போன்றவள் - அங்கயற்கண்ணி. போற்றிசைக்க= போற்றிப்புகழ. விங்கத்து ஆர்வார்= இலிங்கத்தில் இடம்பெற்றவர். கட்டு ஆம்= காவலுடைய. கட்டாம்தரம்= படைத்தொகுதியின் தரம். தெரியும்= ஆராயும். காலம் உணர்ந்தோர்= முக்காலங்களையும் உணர்ந்தவர். கருத்தும்= தமது கருத்துக்கு. திட்டாந்தரம் தெரியும்= சான்று ராயும்.

**பொழிப்புரை** : எட்டுத்திசைகளயும் ஆடையாக உடுத்தவரும் ( திகம்பரரும் ), அனைவரும் நோக்கும் பொருநைநதிக்கு உரிய மான்போன்ற அங்கயற்கண்ணி போற்றிப்புகழ இலிங்கத்தில் எழுந்தருளியுள்ளவரும் ஆகிய சிவபிரான் உள்ள இடம்; காவலுடைய பகைவர்நாட்டுப் படைத்தொகுதியின் தரத்தை ஆராய்வதும், முக்காலமும் உணர்ந்தவர் தமது கருத்துக்குச் சான்று ஆராய்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : திட்டாந்தரம் : செம்மொழிச்சிலேடை.

17. ஏர்வாய் மணிமறுகும் எண்ணெண் கலையினரும்
தேர்வானி னைவீட்டும் சிங்கையே - ஓர்பால்
பசக்கச் சிவந்தார் பனிவரைக்குத் தென்பா
ரிசக்கச் சிவந்தார் இடம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஓர்பால் பசக்கச் சிவந்தார் பனிவரைக்குத் தென்பாரிசக் கச்சிவந்தார் இடம்; ஏர்வாய் மணிமறுகும் தேர் வானினை வீட்டும்சிங்கை. எண்எண்கலையினரும் தேர்வான் நினைவு ஈட்டும் கலைசை.

**குறிப்புரை** : ஓர்பால் பசக்க, ஓர்பால் சிவந்தார்= ஓர்பால் - இடதுபக்கம் பசக்க= பசுமைபொருந்த, ஓர்பால் சிவந்தார்= வலதுபக்கம் செந்நிறம் பொருந்த. இருந்தார் இடம்= இருந்த அம்மையப்பர் வாழிடம். பனிவரைக்குத் தென்பாரிசக் கச்சிவந்தார் இடம்; ஏர்வாய்= அழகு பொருந்திய. மணிமறுகு= நன்மையமைந்த தெரு. தேர் வானினை வீட்டும்= வானத்தை முட்டி அழிக்கும். எண் எண் கலையினர்= அறுபத்து கலைகள் கற்றவர். தேர்வான்= மேலும் தேர்ச்சிபெற. நினைவு ஈட்டும்= நினவாற்றலைப் பெருக்கிக்கொள்ளும்

**பொழிப்புரை** : இடதுபக்கம் பசுமை நிறம்பொருந்த, வலதுபக்கம் செந்நிறம்பொருந்த உள்ளவரும் இமயமலைக்குத் தெற்கில் உள்ள கச்சியாகிய காஞ்சிபுரத்தில் இருப்பவரும் ஆகிய அம்மையப்பர் வாழிடம்; அழகுபொருந்திய நன்மையமைந்த தெருக்களில் ஓடும் தேர் வானத்தை முட்டிஅழிப்பதும், அறுபத்துநான்கு கலைகளைக் கற்றவர் மேலும் தேர்ச்சிபெற நினைவாற்றலைப்பெருக்கிக் கொள்வதும் ஆகிய கலைசை ஆகும்.

**விளக்கம்** : பலப்பல கற்றவராயினும் நினைவாற்றலை மேன்மேலும் பெருக்கிக்கொள்ளவேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

கச்சியின் வளம் ; " கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும், ( தண்டி அலங்காரம் )

**இலக்கணக்குறிப்பு** : கலையினர், சிவந்தார், வந்தார் - வினையாலணையும் பெயர்கள். தேர்வானினை வீட்டும்- பிரிமொழிச்சிலேடை. ஏர்வாய்மணிமறுகுத் தேர் வானினை வீட்டும் உயர்வுநவிற்சியணி.

18. காவல் நனியறமும் கான்பொருநைப் பேராறும்
சீவனமன் பாற்பயந்தாழ் சிங்கையே - நாவல்
மறையவன்தூ தேவினார் வால்வளையை மாற்றார்
மறையவன்றூ தேவினார் வாழ்வு.

**மடக்கடிபிரித்தல் = கூட்டுமுறை** : நாவல் மறையவன் தூது ஏவினார், வால்வளையை மாற்றார் மறைய அன்று ஊது ஏவினார் வாழ்வு; காவல் நனிஅறமும் சீவன் நமன்பால் பயம்தாழ் சிங்கையே; கான்பொருனைப் பேராறும் சீவனம் அன்பால் பயந்து ஆழ் சிங்கையே

**குறிப்புரை** : நாவல் மறையவன்= திருநாவலூச் சுந்தரர். தூது ஏவினார்= தூதாக ஏவப்பட்டவர். வால்வளையை= சங்குவளையல் அணிந்த மனைவியின்பொருட்டு. மாற்றார்= தடுத்தபகைவர். மறைய= ஓடிமறைய அன்று= முன்நாளில், ஊது ஏவினார்= அழைத்து ஏவியவர் ( சிவனடியாராகவந்த சிவபிரான் ). காவல் நனி அறம்= மக்களால் காக்கப்பெறும் மிக்க அறம். சீவன் நமன்பால் பயந்து ஆழ்= மக்கள் யமனியகொண்ட பயத்தில் ஆழ்வதாலும், . கான் பொருநைப் பேராறு சீவனம்= புகழ்வாய்ந்த பொருநைப் பேராற்றுத் தண்ணீர். அன்பால் பயம்தாழ்= உலக அன்பில் சுரந்து அழுந்துவதும்.

**பொழிப்புரை** : திருநாவலூர் மறையவராகிய சுந்தரரால் பரவையாரிடம் தூதாக ஏவப்பட்டவரும், ( இயற்பகையாரின் )சங்குவளையல் அணிந்த மனைவியை, வந்த அடியவர் அழைத்துக் கொண்டு செல்லும்போது ) தடுத்த பகைவர் ஓடிமறைய, இயற்பகையாரை அழைத்து ஏவியவரும் ஆகிய சிவபிரான் வாழிடம்; மக்களால் காக்கப்பெறும் மிக்க அறம் வாழ்வது மக்கள் யமனிடம் கொண்ட அச்சமும், புகழ்வாய்ந்த பொருநைப்பேராறு தண்ணீர் உலகஅன்பில் சுரப்பதும் உடையது சிங்கை.

**விளக்கம்** : இயற்பகையாரின் மனைவியைத் தன்னுடன் அழைத்துச்சென்ற சிவனடியாராகிய சிவபிரானைத் தடுத்தவர்கள் ஓடிமறைய, அவ்வடியவர் இயற்பகையாரை அழைத்தது ;

" இயற்பகை முனிவா ஓலம், ஈண்டுநீ வருவாய் ஓலம்
அயற்பிலா தானேஓலம் அன்பனே ஓலம்ஓலம்
செயற்கரும் செய்கை செய்த தீரனே ஓலம்" என்றான்
மயற்கறு மறைஓலிட்டு மாலயன் தேட நின்றான் " ( பெரியபுராணம் 432 )

19. பற்றித் தமிழ்கேட்கும் பண்பினரும் தோரணமும்
தெற்றித் தலைஅசைக்கும் சிங்கையே - நெற்றி
கிழிக்கு திருக்கழலார் கெற்சிதக்கூற்(று) ஆற்றல்
ஒழிக்கும் திருக்கழலார் ஊர்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : தெற்றி கிழிக்கும் திருக்கழலார் கெற்சிதம் கூற்றுஆற்றல் ஒழிக்கும் திருக்கழலார் ஊர்; தெற்றி தமிழ்பற்றிக் கேட்கும் பண்பினர் தலையசைக்கும் சிங்கை; தோரணமும் தெற்றித் தலையசைக்கும் சிங்கை.

**குறிப்புரை** : நெற்றி கிழிக்கும்= ( ஊர்த்துவதாண்டவத்தில் ) ஆகாயத்தைக் கிழிக்கும். கெற்சிதக் கூற்று= முழங்கிவரும் யமன். தெற்றி தமிழ் கேட்கும்= திண்ணயில் இருந்துகொண்டு தமிழின் சிறப்புக் கேட்கும் பண்புஉடையவர்கள் தம் தலையசைத்துக் கேட்பதும், தெற்றித் தோரரணம்= திண்ணயில் கட்டிய மாவிலைத்தோரணம். தலை அசைக்கும்= காற்றில் நுனியை அசைப்பதும்.

**பொழிப்புரை** : ஊர்த்துவதாண்டவமாடும்போது ஆகாயத்தைக் கிழிக்கும் திருவடியுடையவரும், மார்க்கண்டன் உயிர்கவர முழங்கிவந்த யமனின் ஆற்றலை உதைத்ததன் மூலம் ஒழித்த திருவடியினரும் ஆகிய சிவபிரானின் ஊர்; திண்ணையில் இருந்துகொண்டு தமிழின் சிறப்புகளைக்கேட்கும் பண்பினர் தம்தலையசைத்துக் கேட்பதும்; திண்ணையில் கட்டப்பெற்ற மாவிலைத் தோரரணம் காற்றில் தனது நுனியசைப்பதும் உடைய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தலையசைக்கும் - செம்மொழிச்சிலேடை.

20. இச்சைகூர் மாந்தர் இணைப்புயமும் பூந்தருவும்
செச்சையா ரத்தாமும் சிங்கையே - பிச்சை
இடவென்று வந்தார் இடுபலிகொண் டாசைப்
படவென்று வந்தார் பதி.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பிச்சையிட என்று வந்தார் இடுபலி கொண்டு ஆசைப்பட வென்றுவந்தார் பதி; இச்சைகூர் மாந்தர் இணைப்புயம் செச்சை ஆரத்தாழும் சிங்கை; பூந்தருவும் செச்சை ஆரத் தாழும் சிங்கை.

**குறிப்புரை** : பிச்சை இடவந்தார்= பிச்சைபோட வந்த ( தாருகவனத்து முனிவர்களின்) மனைவியர். இடுபலி= இட்ட சோறு. ஆசைப்பட அம்மகளிர் தன்மேல் ஆசைப்படுமாறு. வென்றுவந்தார்= அவர்களின் ஆசையைவென்று வந்த பிட்சாடனராகிய சிவபிரான். இச்சைகூர் மாந்தர்= போரில் ஆசைமிக்க வீரர்கள். இணைப்புயம்= இருதோள்கள். செச்சை ஆரத் தாழும்= வெட்சிப்பூமாலை சூட விரும்பும். . பூந்தரு= கற்பமரம். செச்சை ஆரத்தாழும்= வீட்டின் மொட்டைமாடியில் பொருந்தத் தலைதாழ்ந்திருக்கும்.

**பொழிப்புரை** : தனக்குப்பிச்சைபோட வந்த தாருகவனத்து முனிவர்களின் மனைவிமார் இட்ட சோற்றினை ஏற்றுக்கொண்டு, அவர்கள் தன்மேல் ஆசைபட, அவர்களின் ஆசையை வென்றுவந்த பிட்சாடனராகிய சிவனின் ஊர்; போரில் ஆசைமிக்க வீரர்களின் இருதோள்களிலும் வெட்சிப்பூ மாலை சூட விரும்புவதும், கற்பகமரம் சிங்கையின் வீட்டு மொட்டைமாடியில் தலை தாழ்திருப்பதும் சிங்கையிலாகும்.

**விளக்கம்** : புறப்பொருளில் வெட்சி என்றொரு திணையுண்டு. அத்திணையில் நிரைகவரச்செல்லும் வீரர்கள் வெட்சிப்பூமாலை சூடுவர். இதனைக்குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : செச்சை ஆரத்தாழும் - செம்மொழிச்சிலேடை.

21. ஆசில் வயப்புரவி ஆர்ப்பும் கணிதரும்வான்
தேசி கனைப்பழிக்கும் சிங்கையே - காசிமுதல்
ஆளும் தலத்தகத்தார் அம்புலிச்சூட் டிற்கவுரி
தாளும் அலத்தகத்தார் சார்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : காசிமுதல் ஆளும் தலத்து அகத்தார், கவுரி தாளும் அம்புலிச் சூட்டில் அலத்து அகத்தார் சார்பு; ஆசில் வயப்புரவி ஆர்ப்பு தேசி கனைப்புஅழிக்கும் சிங்கை; கணிதரும் வான் தேசிகனைப் பழிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : ஆளும்= வீற்றிருக்கும். தலத்து அகத்தார்= தலங்களில் இருப்பவர். கவுரி தாளும் அம்புலி சூட்டில் அலத்து அகத்தார்= அம்மையின் பாதச்சுவடும் அழகுறப் பிறைசூடிய தலையிலுடையவர் - சிவபிரான். ஆசில் வயப்புரவி= குற்றமற்ற வலிமையுடைய குதிரை ஆர்ப்பு= ஆரவாரம். தேசி கனைப்பு அழிக்கும்= பெருங்குதிரைகளின் கனைப்பை வெல்லும். கணிதர்= சோதிடர். வான் தேசிகனைப் பழிக்கும்= வானுலகக் குருவைப் பழிக்கிற.

**பொழிப்புரை** : தான் வீற்றிருக்கும்காசி முதலிய தலங்களின் இருப்பவரும், கவுரிஅம்மையின் பாதச்சுவடும் பிறை சூடியதலையில் அழகுறக் கொண்டவர் சார்ந்துள்ள இடம்; குற்றமில்லாத வலிமை யுடைய குதிரையின் ஆடவாரம் பெருங்குதிரையின் கனைப்பை வெல்லுமிடமும், சோதிடர்கள் வானுலகக் குருவைப் பழிக்கும் இடமும் சிங்கையாகும்.

**விளக்கம்** : மனைவியின் ஊடலைத்தீர்க்கக் கணவன் “ சீறேல் என்று அவள்சீரடி பணிதல் “ உண்டு. இதனை உட்கொண்டு, ஊடலைத்தீர்க்க சிவபிரான் தலைதாழ்த்தி வணங்கியபோது அம்மையின் திருவடி உந்திய சுவடு அப்பனின் தலையில் முன்னைப்பிறையுடன் கூட அழகுறப் பதிந்தது என்றது இலக்கிய வழக்குஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : தாளும் - இறந்தது தழுவிய எச்சவும்மை. தேசிகனைப்பழிக்கும் பிரிமொழிச் சிலேடை.

22. பம்பு பொருநையும்மெய்ப் பண்புடயோர் நன்மதியும்
செம்பு தனைக்குவிக்கும் சிங்கையே -அம்புயமார்
வேதசிர மத்தார் விரிசடைவைத் தார்நடக்கும்
பாதசிர மத்தார் பதி.

**மடக்கடி பிரித்தல் = கூட்டுமுறை** : அம்புயம்ஆர் வேதன்சிரம் அத்து ஆர், விரிசடை வைத்தார் நடக்கும் பாத சிரம் அத்து ஆர் பதி; பம்பு பொருநையும் செம்புதனைக் குவிக்கும் சிங்கை; பண்புடையோர் நன்மதியும் செம் புதனைக் குவிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : அம்புயம் ஆர்= தாமரையில் உள்ள. வேதன்சிரம்அத்தார்= பிரமனுக்கு மேலானவர். விரிசடை வைத்தார்= படர்ந்த சடையுடையவர். நடக்கும் பாத சிரம் அத்தார் = உலகை நடத்தும் திருவடியாகிய உயர்வை உடையவர். பம்பு= ஆரவாரிக்கும். பொருநை= தாம்பிரவருணி ஆறு. செம்புதனைக்குவிக்கும்= செம்புக் கனிமத்தைக் குவிக்கும். பண்புடையோர் நன்மதியும்= நற்பண்பரின் நல்லறிவும். செம் புதனை= சிறந்த புதபகவானை. குவிக்கும்= வணங்கும்.

**பொழிப்புரை** : தாமரையில் உள்ள பிரமனுக்கு மேலானவரும், படர்ந்த சடையுடையவரும், உலகை நடத்தும் திருவடியாகிய பராசத்தியை உடையவரும் ஆகிய சிவபிரானின் ஊர்; ஆரவாரித்துவருகின்ற தாமிரவருணிஆறு செம்புக்கனிமத்தைக் குவிப்பதும், மெய்யான நற்பண்புடையோரின் நல்லறிவு புதபகவானை வணங்குவதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சிவபிரானின் திருவடியைப் பராசத்தி என்பது மரபு. சிவபிரான் நினைவாகிய உலகை நடத்தும் செயலுடையவள் பராசத்தியாதலின், திருவடியை உலகை நடக்கச்செய்வது என்றார். பொருநைப்பேராற்றின் மறுபெயராக இன்று வழங்குவது தாமிரவருணி என்பது. இதன் நீரில் தாமிரக்கனிமச் சத்துள்ளதால் தாமிரவருணி எனப்பெறுகிறது. வருணம்= நீர். தாமிரவருணம் உடையது தாமிரவருணி ஆயிற்று. ஒன்பான் கோள்களுள் புதனை அறிஞன் என்பர். எனவே அறிஞர் புதனை வணங்கினரென்றார்.

**இலக்கணக்குறிப்பு** : செம்புதனைக்குவிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

23. பூங்குழலார் வார்த்தைகளும் பொய்இகந்தோர் ஐம்புலனும்
தீங்குழலா வாய்த்தேறும் சிங்கையே - ஓங்குமுயர்(வு)
ஆன குமரனார் ஐயர்எயில் மூன்(று)எரியத்
தான குமரனார் சார்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஓங்கும் உயர்வுஆன குமரனார்ஐயர், எயில்மூன்று எரியத் தான்நகும் அரனார் சார்பு, பூங்குழலார் வார்த்தைகளும் தீங்குழலா வாய்த்து ஏறும் சிங்கை. பொய் இகந்தோர் ஐம்புலனும் தீங்கு உழலாவாய்த்து ஏறும் சிங்கை.

**குறிப்புரை** : குமரனார் ஐயர்= முருகப்பிரானுக்குத் தந்தை. எயில்= கோட்டை. நகும்= புன்முறுவல் பூக்கும். அரனார்= சிவபிரான். பூங்குழலார்= மென்மையான கூந்தலுடைய மகளிர். தீங்குழலா வாய்த்து ஏறும்= இனிய புல்லாங்குழலாக இனிமைமிகும். பொய் இகந்தோர்= பொய்யினை வெறுத்துஒதுக்கியவர். ஐம்புலனும்= ஐவகை அறிவுகளும். தீங்கு உழலாவாய்த்து= தீயவற்றில் உழலாமல். ஏறும்= கடைத்டேறும்.

**பொழிப்புரை** : மிகமிக உயர்வுபொருந்திய முருகப்பிரானின தந்தையும், மூன்று கோட்டையையும் எரித்தவரும் ஆகிய சிவபிரான் சார்ந்துள்ள இடம்; மென்மையான கூந்தலுடைய மகளிரின் சொற்கள்இனிய புல்லாங்குழலாய் இனிமமைமிகும் சிங்கை; பொய்யினை வெறுத்து ஒதுக்கியவர்களின் ஐவகைஅறிவுகளும்

தீயவற்றில் உழலாமல் அவர்களைக் கடைதேறவைக்கும் சிங்கையாகும்.

**விளக்கம்** : பொய்யாமை, பிறஎல்லா அறங்களையும் செய்த பயந்தரும். இதனை,

" பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று "

என்ற திருக்குறள் உணர்த்தும்.

24. மையில் செறிகுழலார் வார்முலைச்சாந் தும்குருகும்
செய்யில் கயிலாகும் சிங்கையே - கையில்
நெருப்புக் கணிச்சியார் நேயமிலார் பொய்ம்மை
விருப்புக் கணிச்சியார் வீடு.

**மடக்கடிபிரித்தல்** + கூட்டுமுறை : கையில் நெருப்புக் கணிச்சியார், நேயம்இலார் பொய்ம்மை விருப்புக்கண் இச்சியார் வீடு; மையில் செறிகுழலார் வார்முலைச்சாந்தும் செய்யில் கயில் ஆகும் சிங்கை. குருகும் செய்யில் கயில் ஆகும் சிங்கை.

**குறிப்புரை** : கணிச்சி= மழுஆயுதம். நேயம் இலார்= அன்பில்லாதார். பொய்ம்மை விருப்புக்கண்= பொய்யான அன்பில். இச்சியார்= விருப்பமில்லாதவர். மையில்= கருமையான மையினைப் போல். செறிகுழலார்= அடர்ந்த கூந்தலுடையமகளிர். வார்முலைச் சாந்து= கச்சணிந்த முலைக்கண் பூசும் சாந்து= சந்தனம்.. செய்யில்= பூசினால். கயில் ஆகும்= கடைசியானதாகும். குருகும் செய்யில்= வளையல் போட்டால்.. கயிலாகும்= கடைசியானதாகும்.

**பொழிப்புரை** : கையில் தீப்பொறிபறக்கும் மழுஏந்தியவரும், பிறரின்அன்பில்லாத பொய்யான விருப்பத்தை விரும்பாதவருமான சிவபிரான் இருப்பிடம்; மைபோல் கருமையான அடர்ந்த கூந்தலுடைய மகளிரின் கச்சணிந்த முலைக்குச் சந்தனம்பூசுவது கடைசியானதாகும்; மகளிரின் கைக்கு வளையல் போடுவதும் கடைசியானதாகும்.

25. வவ்வு நிதிக்ககன்ற மைந்தரும் துப்பும் மடவார்
செவ்வி தழைக்கவரும் சிங்கையே - எவ்வினையும்
தீரத் திருந்தகத்தர் சேவைசெயத் தண்பொருநைத்
தீரத் திருந்தகத்தர் சேர்வு.

**மடக்கடிபிரித்தல் + கூட்டுமுறை** : எவ்வினையும் தீரத் திருந்து அகத்தர், சேவைசெயத் தண்பொருநைத் தீரத்து இருந்த கத்தர் சேர்வு ; வவ்வு நிதிக்கு அகன்றமைந்தர் செவ் இதழைக் கவரும் சிங்கை ; துப்பும் மடவார் செவ் இதழைக் கவரும் சிங்கை

**குறிப்புரை** : எவ்வினையும் தீர= எவ்வகை வினையும் இல்லாத. திருந்து அகத்தர்= இயல்பாகவே திருந்திய உள்ளமுடையவரும், தொண்டு செய= பணி - உதவிசெய்ய பொருநைத்தீரத்து= பொருநையாற்றங் கரையில் இருந்த. கத்தர்= கடவுள். சேர்வு= சேர்ந்திருக்கும் இடம். வவ்வு நிதிக்கு= ஈட்டும்செல்வத்தின் பொருட்டு. அகன்ற மைந்தர்= பிரிந்து சென்ற ஆடவர். செவ்வி தழைக்க வரும்= குடும்பத்தின் தகுதி செழிக்கச் செல்வத்துடன் வருவதும்; மடவார் செவ்வி= மகளிரின் இதழ்ச்செம்மையை. துப்பும் தழைக்க வரும்= பவளம் தன்பால் பெறுமாறு உள்ளதும்.

**பொழிப்புரை** : எவ்வகை வினையும் இல்லாமல் இயல்பாகவே திருந்திய உள்ளமுடையவராய் உதவிசெய்யப் பொருநையாற்றங்கரையில் வந்துஇருக்கும் கடவுளின் ஊர், ஈட்டும் செல்வத்தின்

பொருட்டுப்பிரிந்த ஆடவர் குடும்பத்தின் தகுதி செழிக்கச்செல்வத்துடன் வருவதும், மகளிரின் இதழ்ச்செம்மையைப் பவளம் தன்பால் பெறுமாறு உள்ளதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செவ்விதழைக்க வரும் - பிரிமொழிச்சிலேடை.

26. கன்னித் தடம்பொழிலால் கற்றோகை வந்தனையால்
சென்னித் தலம்புகுக்கும் சிங்கையே - தன்னைத்
திடவ சனத்தினான் சீர்வழுத்த வைத்தான்
விடவ சனத்தினான் வீடு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : தன்னைத் திட வசனத்தினான் சீர்வழுத்த வைத்தான் விடவ சனத்தினான் வீடு; கன்னித் தடம்பொழிலால் சென்னித்தலம் புகுக்கும் சிங்கை; கற்றோர்கை வந்தனையால் சென்னித்தலம் புகுக்கும் சிங்கை.

**குறிப்புரை** : திட வசனத்தினான்= உறுதியான சொற்களால். சீர் வழுத்த= சிறப்புகளைப் போற்ற. வைத்தான்= செய்தசிவபிரான். விடவ சனத்தின் வீடு= அண்டத்து உயிரினங்களை எல்லாம் உடையவனும் ஆகிய சிவபிரானின் வீடு; கன்னித் தடம் பொழிலால்= இளைய அகன்ற சோலையால். சென்னித்தலம் புகுக்கும்= உயர்ந்த இடத்தில் வைத்துப்போற்றப்பெறும் சிங்கை. கற்றோர்கை வந்தனையால்= கற்றவவர்கள் கைகூப்பி வணங்குவதால். சென்னித்தலம்= உயர்ந்த வீட்டுலகில். புகுக்கும்= புகுமாறு செய்யும் சிங்கை.

**பொழிப்புரை** : உறுதியான சொற்களால் தனது சிறப்புகளைப்போற்ற வைத்தவனும், அண்டத்து உயிர்களை எல்லாம் தன்உடைமையாகக் கொண்டவனுமாகிய சிவ பிரானின் வீடு ; இளைய மரங்களுடன் அகன்று விரிந்தசோலைகள் உலகவரால் உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றப்பெறுவதும், கற்றவர்கள் கைகூப்பி வணங்குவதால் அவர்களை வீட்டுலகில் புகுமறு செய்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சென்னித் தலம் புகுக்கும் - செம்மொழிச்சிலேடை.

27. ஓவா வளங்கெழுநீர் ஊர்க்களம ரும்தெருவும்
தேவா லயம்காட்டும் சிங்கையே - மேவார்
இருப்பரணங் காதரனார் ஈர்ம்பொதியச் சாரல்
விருப்பரணங் காதரனார் வீடு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : மேவார் இருப்பர் அணங்கு ஆதரனார் ஈர்ம்பொதியச் சாரல் விருப்பு அரணம் காதரனார் வீடு; ஓவா வளம்கெழுநீர் ஊர்க்களமரும் தே ஆ லயம் காட்டும் சிங்கை, தெருவும் தேவாலயம் காட்டும் சிங்கை.

**குறிப்புரை** : அணங்கு ஆதரனார்= உமையம்மையின்மேல் அன்பு காட்டுகிறவர். மேவார் இருப்பர் = பொருந்தி இருக்கும். ஈர்ம்பொதியச்சாரல்= குளிர்ச்சியான பொதிகைச்சாரலில். அரணம் காதரனார்= பாதுகாப்புடன் அமைந்திருப்பவர். ஓவா= இடையீடில்லாத. ஊர்க் களமர்= ஊரில்வாழும் உழவர்களும். தே ஆ லயம் காட்டும்= "தே" என்று அழைத்து அன்பு காட்டும். தெருவும் தேவாலயம் காட்டும் - பொருள் வெளிப்படை.

**பொழிப்புரை** : உமாதேவியின்மேல் அன்பு காட்டுகிறவரும், குளிர்ச்சிபொருந்திய பொதிகைமலைச் சாரலில் பாதுகாப்புடன் அமைந்திருக்கிறவரும் ஆகிய சிவபிரானின் வீடு ; இடையீடில்லாத நீர்வளம் பொருந்திய ஊரில் வாழும் உழவர்கள் பசுக்களைத் " தே " என்று அன்புடன் அழைப்பதும்; தெருக்கள் தேவாலயங்களை உடையதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : உழவர்கள் பசுக்களைத் " தே, தே " என்று அன்புடன் அழைக்கும் வழக்கமுடையவர்.

**இலக்கணக்குறிப்பு** : தேவாலயம்காட்டும் - பிரிமொழிச்சிலேடை.

28. மெய்யுள் வழங்குதமிழ் வேந்தருமென் பால்வளையும்
செய்யு ளவைவழங்கும் சிங்கையே - பையுள்
சிதயத் திருந்தார் திறத்ததன்று மேலோர்
இதயத் திருந்தார் இடம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : மேலோர் இதயத்து இருந்தார் இடம், பையுள் சிதையத்து இருந்தார் திறத்ததன்று ; மெய்யுள் வழங்கு தமிழ்வேந்தரும் செய்யுள் அவை வழங்கும் சிங்கை ; பால் வளையும் செய்யுள் அவை வழங்கும் சிங்கை.

**குறிப்புரை** : மேலோர் இதயத்து இருந்தார் இடம்= மேலானவர்களின் இதயத்தில் இருந்தவர் இடம், பையுள் சிதையத்து இருந்தார் திறத்ததன்று= அனைவரும் துன்பப்படும் சுடுகாடன்று; மெய்யுள் = உலகில். தமிழ்வழங்கு வேந்தர்= தமிழை வாரிவழங்கும் தலைமையர். செய்யுள்= தமது பாக்களை. அவைவழங்கும்= கற்றோர் அவையில் வழங்கும். பால் வளையவை= வெண்சங்குகளாகிய் அவைகள். செய்யுள் வழங்கும் சிங்கை= நன்செய்நிலத்தில் ஊர்ந்துசெல்லும் சிங்கையாகும்.

**பொழிப்புரை** : மேலானவர்களின் இதயத்தில் இருந்தவராகிய சிவபிரான் வாழிடம், அனைவரும் துன்பப்படும் சுடுகாடன்று ; உலகில் அனவர்க்கும் தமிழை வாரிவழங்கும் தலைமைசான்ற புலவர்கள் தமது செய்யுட்களைக் கற்றோர் அவையில் வழங்கும் சிங்கையாகும்; வெண்சங்குகளாகியஅவை, நன்செய் நிலத்தில் ஊர்ந்துசெல்லும் சிங்கையாகும்.

. **விளக்கம்** : சுடலைப்பொடி பூசியவன் இருப்பிடம் சுடலையாயினும் அதனை மாற்றிஇவர், மேலானவர் இதயம் என்றநயம்காண்க.

**இலக்கணக்குறிப்பு** : செய்யுள் அவை வழங்கும் - செம்மொழிச்சிலேடை.

29. கன்மம் தருவினையும் கன்னியர்கொங் கைச்சுவடும்
சென்மந் தரமலைக்கும் சிங்கையே - வன்மம்
முரணகம லத்தினார் முன்பயிலா நிர்த்த
சரணகம லத்தினார் சார்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : வன்மம் முரண கமலத்தினார் முன் பயிலா நிர்த்த சரணத்தினார் சார்பு ; கன்மம் தருவினையும் சென்மம் தர மலைக்கும் சிங்கையே ; கன்னியர் கொங்கைச் சுவடும் செல் மந்தரம் மலைக்கும் சிங்கையே;

**குறிப்புரை** : வன்மம்= ஆணவம். முரண= மாறுபட. கமலத்தினார் முன்= பிரமன் முன்னே. பயிலா= காட்சிதராத. நிர்த்த சரணகமலத்தினார்= ஆனந்தக் கூத்தாடிய திருவடியினர் ஆகிய சிவபிரான். கன்மம்= புண்ணிய பாவச்செயல்கள். தரு வினை= தரும் ஊழ்வினை. சென்மம் தர= பிறவிகளைத்தர. மலைக்கும்= போரிடும். கன்னியர் கொங்கைச் சுவடு= கன்னிப்பெண்களின் கொங்கைக் கட்டு. செல் மந்தரம்= மேகம் தவழும். மலைக்கும்= ஒக்கும்

**பொழிப்புரை** : ஆணவம் காரணமாக மாறுபட்ட பிரமன்முன் காட்சி தராத திருவடித்தாமரையுடைய சிவபிரான் சார்ந்திருப்பது; பாவபுண்ணியங்களின் ஊழ்வினை தரும் பிறவியை அழிக்கப் போரிடுவதும்;

கன்னிப்பெண்களின் கட்டுடன் கூடிய கொங்கைகள், மேகம் தவழும் மந்தரமலையை ஒப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : இருவினைகளும் பிறவி தருவன ஆதலின், அவை இஅற்டும் அடங்கக் கன்மம் என்று பொதுப்படக்கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : சென்மந் தரமலைக்கும் - பிரிமொழிச்சிலேடை..

30. பத்த சனங்களுமென் பான்மொழியார் வேல்விழியும்
சித்த சனம்பயிலும் சிங்கையே - சுத்தசல
வானகங்கைக் குள்ளார் வரதா பயம்மழுமான்
ஆனகங்கைக் குள்ளார் அகம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : சுத்தசல வானகங்கைக்கு உள்ளார், வரத அபயம் மழு மான் ஆன கம்= வரதம் அபயம் மான் மழுவாயுதம் முதலியவற்றுடன் வீடுபேற்றையும். கைக்குள்ளார்= தன்கையில் - பொறுப்பில் கொண்டவர். அகம்= இடம். பக்தசனங்கள்= அடியார் கூட்டம். சித்த சனம் பயிலும்= சித்தர் கூட்டத்துடன் பயிலும். பால்மொழியார்= பால்போன்ற இன்சொல்பேசும் மகளிர். சித்தசன்= மன்மதனின். அம்பு அயிலும்= மலரம்பை உண்டுவிடும் - வெல்லும்.

**பொழிப்புரை** : தூய கங்கைநீரினைத் தன்கையில் வைக்காது , வரதம் அபயம் மழுவாயுதம் மான் முதலியவற்றுடன் வீடுபேற்றையும் தன்கையில் - தன்பொறுப்பில் கொண்ட சிவபிரான் வாழிடம்; அடியார் கூட்டம் சித்தர்கூட்டத்துடன் பயில்வதும், பால்போலும் இன்மொழிபேசும் மகளிரின் வேல்போன்ற விழிகள், மன்மதனின் மலரம்புகளை உண்டுவிடும் - வெல்லும் சிங்கையாகும்.

**விளக்கம்** : இனம் இனத்தோடு - சான்றோர் சான்றோர் பாலராப என்றபடி அடியார் கூட்டம் சித்தர் கூட்டத்தைச் சார்ந்த்து என்றார்

**இலக்கணக்குறிப்பும்:** சித்த சனம்பயிலும் - பிரிமொழிச்சிலேடை.

31. காம்பார் பசுந்தோளார் கண்ணும் மணிவயிறும்
தேம்பா நலங்கடக்கும் சிங்கையே - பாம்பா
பரணத்(து) அரனார் பார்த்தன் அடித்திட்ட
இரணத்(து) அரத்தனார் வீடு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பாம்பு ஆபரணத்து அரனார், பார்த்தன் அடித்திட்ட இரணத்து அரத்தனார் வீடு; காம்புஆர் பசுந்தோளார் கண்ணும் தேன் பால் நலம்கடக்கும் சிங்கை, மணிவயிறு தேம்பா நலம்கடக்கும் சிங்கை.

**குறிப்புரை** : பாம்பு ஆபரணத்து அரனார், பார்த்தன் அடித்திட்ட= அர்ச்சுனன் தன் வில்கால் அடித்த. இரணத்து= புண்ணில். அரத்தனார்= குருதி வெளிப்பட இருந்தவர் - சிவபிரான். காம்பு ஆர்=மூங்கிலாகப் பொருந்திய. கண்ணும்= கண்களும் தேன் பால் நலம்= தேன் பால் ஆகியவற்றின் நன்மை. கடக்கும்= வெல்லும் மணி வயிறும் தேம்பா நலங்கள் தக்கும்= அழகிய வயிறு . தேம்பா நலங்கள் தக்கும்= வாடாத நன்மையைத் தங்கவைத்திருக்கும்.

**பொழிப்புரை** : அருச்சுனன் வில்லால் அடித்ததால் ஏற்பட்ட புண்ணில் இரத்தம்தோய இருந்தவரும்,

நாகத்தை அணிகலனாக அணிந்தவரும் ஆகிய சிவபிரான் வீடு; மூங்கிலின் அழகுபொருந்திய வளமான தோள்களுடய மகளிரின் கண்கள் - பார்வை - தேனையும் பாலையும் வெல்வதும்; அவர்களுடைய அழகிய வயிறு வாடாத நலங்களைத்தக்க வைத்திருப்பதும் ஆகிய சிங்கை ஆகும்.

**விளக்கம்** : அருச்சுனன் சிவபெருமானிடம் பாசுபத ஆயுதம்பெறத்தவம் செய்தபோதுஅவனைநோக்கி வந்த பன்றியை அவனும் வேடனாகவந்த சிவபிரானும் ஒரேசமயத்தில் எய்த அம்பினால் பன்றி வீழ்ந்த போதிலும், கொன்றவர்யார் என்று ஏற்பட்ட சர்ச்சையால் போரிட்டனர். அப்போது அர்ச்சுனன் வில்லால் சிவபிரானின் தலையில் அடிக்க அவ்விடம் புண்ணாகிக் குருதி வடிந்த செய்தியைக்குறிப்பிட்டார்.

( வில்லிபரதம் அர்ச்சுனன் தவநிலைச்சருக்கம். )

**இலக்கணக்குறிப்பு** : தேம்பா நலங்கடக்கும் - பிரிமொழிச்சிலேடை.

32. அண்ணல் பழம்பொருநை ஆறும்அறி ஞோர்மனையும்
திண்ணத் தறன்நிறைக்கும் சிங்கையே - எண்ணத்தின்
முன்றுருவம் ஆனான் முகம்காண மூட்டழல்போல்
அன்றுருவம் ஆனான் அகம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : எண்ணத்தின் முன் துருவம் ஆனார், முகம் காண மூட்டுஅழல்போல் அன்றுருவம் ஆனார்= மூட்டிய தீப்போல். அன்று உருவம் ஆனார்= யார்பெரியவர் என்று அயனும் அரியும் போட்டியிட்ட போது, மூட்டிய தீப்போல் வடிவுபெற்றவர்.

**குறிப்புரை** : எண்ணத்தின் முன்= நினைக்குமுன். துருவம் ஆனார்= நிலைபெற்றவர். முகம்காண= வடிவகாண. முன் முகம்காண= அயனும் அரியும் முற்காலத்தில் வடிவத்தைக்காண. மூட்டு அழல்போல் உருவம் ஆனார்= மூட்டிய தீப்பிழம்பு வடிவானவர்.. அண்ணல் பழம்பொருநை ஆறு திண்ணத்து அறல் நிறைக்கும்= பெருமை சான்ற பொருநையாறு உறுதியாக அறல்மணலைக் கொண்டுவந்து நிறைக்கும். அறிஞோர்மனை திண்ணத்து அறன் நிறைக்கும்= அறிஞர்களின் வீடு மெய்யாகவே அறச்செயல்களால் நிறைந்திருக்கும்

**பொழிப்புரை** : நினைக்கும் முன் நிலைபெற்றவரும், அயனும் அரியும் வடிவம்காண முற்பட்ட போது, மூட்டிய தீப்பிழம்புபோல் வடிவமானரும் ஆகிய சிவபிரான் இடம்; பெருமைசான்ற பொருநையாறு உறுதியாக அறல்மணலைக் கொண்டுவந்து நிறைப்பதும், அறிஞர்களின்வீடு மெய்யாக அறச்செயல்களால் நிறைந்திருப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : நினைக்கும் முன் நிலைபெறுதலாவது= நினைவுக்கு எட்டாத காலத்திலேயே - அநாதியே நிலைபெற்றிருத்தல்.

**இலக்கணக்குறிப்பு** : திண்ணத் தறல்நிறைக்கும் - பிரிமொழிச்சிலேடை..

33. பாங்களவா எண்டிசையும் பத்திஅடி யார்குழுவும்
தீங்களவா சஞ்செறியும் சிங்கையே - ஓங்காரத்(து)
உள்ளொளியா நின்றான் உபநிடதத்(து) உச்சியின்மேல்
அள்ளொளியா நின்றான் அகம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஓங்காரத்து உள்ஓளியா நின்றான், உபநிடதத்து உச்சியின்மேல் அள் ஒளியா நின்றான் அகம்: பாங்கு அளவா எண்திசையும் தீம் களவாசம் செறியும் சிங்கை. பத்திஅடியார் குழுவும் தீங்கு அளவா சம் செறியும் சிங்கை.

**குறிப்புரை** : உள் ஒளியா= உள்ளே ஒளிரும் ஒளியாக. அள் ஒளியா= செறிந்த ஒளியாக. பாங்கு அளவா= பக்கம் பொருந்தாத. எண்திசையும்= எட்டுத்திசைகளிலும். தீம் களவாசம் செறியும்= இனிய களப்படி. செறியும்= மிகப்பெறும். பத்தி அடியார்குழு= பத்திமை சான்ற் அடியவர்கூட்டம். தீங்கு அளவா சம் செறியும்= தீங்கு பொருந்தாத அன்பினில் நிறைந்திருக்கும்.

**பொழிப்புரை** : ஓங்காரத்தின் உள்ளே ஒளிரும்பொருளாக நிலைத்தவனும், உபநிடதத்தின் உச்சியில் செறிந்த ஒளியாகவும் நிலைத்த சிவபிரான் இருப்பிடம்; பக்கம்பொருந்தாத எட்டுத்திசைகளிலும் இனிய களப்படிபெறும் சிறப்புடைய சிங்கையாகும்; பத்திமைசான்ற அடியார் கூட்டம் தீங்கு பொருந்தாத அன்பினில் செறிந்திருக்கும் சிங்கையாகும்.

**விளக்கம்** : களப்படியாவது, உழவர்கள் களத்தில் பெறும் மானியம். ஓங்காரம் ஒளிவடிவானது என்பர். இதன் உட்பொருள் சிவபரம்பொருள். இதனை,

" ஓங்கரத்துள் ஒளிக்கும் ஒளியாய் .... நின்றோனே " ( கந்தர்கலிவெண்பா )

உபநிடதம் சிவபரம்பொருளை ஆங்காகு ஒருவாறு போற்றுகிறது என்பர் ஆதலின்
" உபநிடதத்து உச்சியின்மேல் அள் ஒளியா நின்றான் " என்றார்.

34. மைவார் பொழில்துயிலும் மாமதியை வேதியரைச்
செவ்வா ரணம்எழுப்பும் சிங்கையே - ஒவ்வார்
போற்றுக் கொடியான் புகழவும்என் பால்இரங்கும்
ஏற்றுக் கொடியான் இடம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஒவ்வார்போற்றுக்கு ஒடியான், புகழவும் என்பால் இரங்கும் ஏற்றுக்கொடியான் இடம், மைவார்பொழில் துயிலும் மாமதியைச் செவ் வாரணம் எழுப்பும் சிங்கை; வேதியரைச் செவ்வாரணம் எழுப்பும் சிங்கை.

**குறிப்புரை** : ஒவ்வார்= நல்லொழுக்கத்தில் பொருந்தாதவர், போற்றுக்கு ஒடியான்= புகழ்ச்சிக்கு மயங்காதவன். ஏற்றுக்கொடியான்= விடைக்கொடியுடைய சிவபிரான். மைவார்= இருள் மிக்க. பொழில் துயிலும்= சோலையில் தூங்கும். மாமதியை= பெரியயானையை - ஆண்யானையை. செவ்வாரணம் எழுப்பும்= சிறந்தபெண்யானை துயில் எழுப்பும். வேதியரை= வேதம் ஓதுகிறவரை, செவ்வாரணம்= சேவல்.

**பொழிப்புரை** : நல்லொழுக்கத்தில் பொருந்தாதவரின் புகழ்ச்சிக்கு மயங்காதவனும், நான் புகழவும் என்பால் மனம் இரங்குகிறவனும் ஆகிய சிவபரம்பொருள் வாழிடம்; இருள்மிக்க பெரியசோலையில் உறங்கும் ஆண்யானையைச் சிறந்த பெண்யானை எழுப்புவதும், வேதம் ஓதுகிறவரைச்சேவல் எழுப்புவதும் ஆகிய கலைசையாகும்.

35. தூயவரை இஞ்சியின்வாய்த் தூயமதி யைக்கண்டு
தீயவர வம்கடுக்கும் சிங்கையே - ஆயர்
கறவையா னான்அ னல்மழுவான் அன்னப்
பறவையான் காணான் பதி.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஆயர் கறவையானான், அனல் மழுவான், அன்னப் பறவையான் காணான் பதி; தூயவரைத் தீயவர் அவம் கடுக்கும் சிங்கை; இஞ்சியின்வாய்த் தூய மதியைக் கண்டு தீய அரவம் கடுக்கும் சிங்கை

**குறிப்புரை** : ஆயர் கறவையான்= ஆயர்களுக்குப் பசுப்போன்று உதவுகிறவன், அன்னப்பறவையான் காணான்= அன்னப்பறவையாக வானில் பறந்துசென்ற பிரமனால் காணமுடியாதவன் ஊர்; தூயவரை= தூய்மையான வாழ்க்கையுடையவரை. தீயவர் அவம் கடுக்கும்= தீயவர்களின் அவச்சொல் மனம் உளையச்செய்யும். இஞ்சியின்வாய்= மதிலில் உச்சியில். தூய மதியைக்கண்டு= முழுநிலவைப் பார்த்து. தீய அரவம்= கொடிய நாகம். கடுக்கும்= ( விழுங்க இயலாமையால் )சினம் கொள்ளும்.

**பொழிப்புரை** : ஆயர்களுக்குப் பசு உதவுவதுபோல் உயிர்களுக்கு உதவுகிறவனும், தீப்பொறி பறக்கும் மழுப்படை ஏந்தியவனும், அன்னப்பறவையாக வானில் பறந்துசென்றும் பிரமனால் காணமுடியாதவனும் ஆகிய சிவபிரான் வாழுமிடம்; தூய்மையான வாழ்க்கையுடையவரைத் தீயவர்களின் அவச்சொல் மனம் உளையச்செய்வதும், மதிலின் உச்சியில் முழுநிலவைப்பார்த்தும் விழுங்கமுடியாததால் நாகம் சினம்கொள்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீயவர வங்கடுக்கும் - பிரிமொழிச்சிலேடை.

36.
அன்றலைநீர் உண்டவனும் ஆரத் தடம்பொழிலும்
தென்றலை மணந்துவக்கும் சிங்கையே - மன்றல்
உலையா வணமளித்(து)ஆ ரூரனைஆட் கொள்ள
விலையா வணம்அளித்தார் ஊர்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : மன்றல் உலை ஆவணம் அளித்து, ஆரூரனை ஆட்கொள்ள விலை ஆவணம் அளித்தார் ஊர்; அன்று அலைஉண்டவன் தென்றலை மணந்து உவக்கும் சிங்கை; ஆரம் தடம்பொழில் தென்றல் ஐ மணந்து உவக்கும் சிங்கை

**குறிப்புரை** : ஆரூரனை ஆட்கொள்ள= சுந்தரரை அடிமைகொள்ள. மன்றல் உலை= திருமணத்தைக் கெடுக்கும். ஆவணம் அளித்து= ஓலைதந்து. விலை ஆவணம் அளித்தார்= விலையாக (நட்பு) உரிமை தந்தவர் . அன்று அலைநீர் உண்டான்= கடலினைப் பருகிய அகத்தியர். தென்றலை மணந்து உவக்கும்= தென்றலை நுகர்ந்து மகிழும் ஆரம் தடம் பொழில்= சந்தனமரங்கள் நிறைந்த பெரிய சோலை. தென்றல் ஐ மணந்து உவக்கும்= தென்றலையும் அழகையும் நுகர்ந்து மகிழும்.

**பொழிப்புரை** : ஆரூரராகிய சுந்தரரை ஆட்கொள்ள, அவரது திருமணத்தைக் கெடுக்கும்ஓலைதந்தும், அதற்கு விலையாக நட்புரிமை தந்தவர் ஊர்; முற்காலத்தில் கடல்நீரைப் பருகிய அகத்தியர் தென்றல் காற்றை நுகர்ந்து மகிழ்வதும், சந்தன மரங்கள் நிறைந்த பெரியசோலையின் தென்றல்காற்றை மக்கள் நுகர்ந்து மகிழ்வதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சுந்தரரரின் திருமணத்தைத் தடுக்கக் காட்டிய ஓலைச்செய்தி :

" அருமறை நாவல்ஆதி சைவன்ஆ ரூரன்செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு யானும்என்பால்
வருமுறை மரபுஉளோரும் வழித்தொண்டு செய்தற்குஓலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்குஇவை என்எழுத்து. " ( பெரியபு. 205 )

சுந்தரர்க்கு நட்புரிமை அளித்தசெய்தி :
" தோழமையாக உனக்குநம்மைத் தந்தனம் " ( பெரியபு. 273 )

“ ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி “ ( சுந்தரர். திருவாரூர் )..

**இலக்கணக்குறிப்பு** : தென்றலை மணந்துவக்கும் - பிரிமொழிச்சிலேடை.

37.
வெய்ய மிடியும் விரிபொருநை வெண்டிரையும்
செய்ய வளங்கொழிக்கும் சிங்கையே - ஐயர்
துவளக் குழையார் துடிஇடையார் சங்கத்
தவளக் குழையார் தலம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : துடிஇடையார் துவள ஐயர் குழையார். தவள சங்கக் குழையார் தலம்; வெய்ய மிடியும் செய்யவள் அங்கு ஒழிக்கும் சிங்கை; பொருநை வெண்திரை செய்ய வளம் கொழிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : துடி இடையார்= உடுக்கை ஒத்த இடுப்புடைய அம்மை. துவள= குழைய. ஐயர் குழையார்= அப்பன் குழையார். தவள சங்கக் குழையார் தலம்= வெண்மையான சங்குக்குழையணிந்த சிவபிரான் இருப்பிடம்; வெய்ய மிடி= கொடிய வறுமை. செய்யவள் அங்கு ஒழிக்கும்= திருமகள் அவ்விடத்தில் - சிங்கையில் - ஒழிப்பாள், விரிபொருநை வெண்திரை= அகமான பொருநையாற்றின் வெண்மையான அலை. செய்ய வளம் கொழிக்கும்= சிறந்த வளத்தைப் பொழியும்.

**பொழிப்புரை** : உடுக்கை ஒத்த அம்மை குழைய, குழையாத அப்பன் வெண்மையான சங்கக் குழையணிந்து வாழும் இடம், கொடிய வறுமையைத் திருமகள் ஒழிப்பதும், பொருநை யாற்றின் வெண்மையான அலைகள் அங்குச்சிறந்த வளத்தினைப் பொழிவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செய்ய வளங்கொழிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

38.
காவல் இளைஞர் கடுநடையில் பூந்தடத்தில்
சேவ லனங்குடையும் சிங்கையே - மூவர்
திருப்பாட லாரத்தர் சிற்சபையில் ஒன்றித்
திருப்பாட லாரத்தர் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூடுமுறை** : மூவர் திருப்பாடல்+ஆர் அத்தர். சிற்சபையில்+ ஒன்றித்து+ இருப்பு+ ஆடல் ஆர்+ அத்தர் சேர்வு; காவல் இளைஞர்கடுநடையில்+ சேவலன்+ அங்கு+ உடையும்சிங்கை. பூந்தடத்தில்+ அனம்சேவல்+குடையும்சிங்கை.

**குறிப்புரை** : மூவர்= தேவாரமூவர். திருப்பாடல்= திருமுறைகள். ஆர் அத்தர்= கேட்டருளும் தலைவன். சிற்சபையில் ஒன்றித்து ஆடல் இருப்பு அத்தர்= பொன்னம்பலத்தில் பொருந்தி ஆடும் இடமாகக் கொண்ட சிவன். சேர்வு= பொருந்தி இருப்பது. காவல் இளைஞர்= காவல் வீரர்கள். கடுநடையில்= விரைந்தநடையால். சேவலன்= திருடன். அங்கு உடையும்= அங்கிருந்து ஓடும். அனம்சேவல்= ஆண் அன்னப்பறவை. குடையும்= திளைக்கும்.

**பொழிப்புரை** : தேவாரமூவரின் திருமுறைகளைக் கேட்டருளும் தலைவனும், பொன்னம்பலத்தில் பொருந்தி ஆடும் இடமாகக் கொண்டவனும் ஆகிய சிவபெருமான் பொருந்திஇருக்குமிடம்; ஊர்காவல் வீரர்களின் விரைந்த நடைகாரணமாகத் திருடன் அங்கிருந்து ஓடுவதும், மலர்கள்மலர்ந்த குளத்தில் ஆண் அன்னப்பறவைகள் திளைப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சேவலனங்குடையும் - பிரிமொழிச்சிலேடை.

39. மைதவழ்கண் ணார்மருங்கும் மாதவத்தோ ரும்தவறு
செய்தவகம் சிக்காக்கும் சிங்கையே - கைதைநறும்
போதைமுடி வைதணியார் போற்றறியார் புன்பிறப்பை
வாதைமுடி வைத்தணியார் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : கைதைநறும் போதை + முடி+ வைத்து+ அணியார்; போற்றறியார்+ புன்பிறப்பை+ வாதை+ முடிவை+ தணியார் வாழ்வு; மைதவழ்கண்ணார்+ மருங்கும்+ வஞ்சிக்கு ஆக்கும்+ சிங்கை; மாதவத்தோரும்+ தவறுசெய்+ தகவு+ அஞ்சிக்காக்கும் சிங்கை.

**குறிப்புரை** : கைதை நறும் போதை= தாழையின் மணமிக்க மலரை. முடி= தலை. அணியார்= சூடாதவர். போற்று அறியார்= தன்னைப்போற்ற - வணங்க - அறியாதவர். புன்பிறப்பை= அற்பமானபிறப்பை. வாதை= துன்பம். தணியார்= குறைக்காமல் அனுபவிக்கச்செய்கிறவர். மைதவழ் கண்ணார்= மைபூசிய கண்களுடைய பெண்டிர். மருங்கு= இடுப்பு. வஞ்சிக்கு ஆக்கும்= வஞ்சிக்கொடிக்கு உவமை ஆக்கும். தவறு செய் தகவு அஞ்சிக்காக்கும்= தவறு செய்தலை அஞ்சிச்செய்யாது காத்துக்கொள்ளும்.

**பொழிப்புரை** : தாழையின் மணம் மிக்க மலரைத் தலையில் சூடிக்கொள்ளாதவரும், தன்னை வணங்காதவரின் அற்பப்பிறப்பையும் துன்பத்தையும் குறைக்காமல் அனுபவிக்கச் செய்கிறவரும் ஆகிய சிவபிரான் வாழுமிடம்; மைதீட்டியகண்களுடைய பெண்டிரின் இடுப்பை வஞ்சிக்கொடி என்று கூறுமிடமும், சிறந்த தவத்தோர் தவறு செய்யாமல் அஞ்சிக்காத்துக்கொள்வதுமாகிய இடம் சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செய்தவம்சிக்காக்கும் பிரிமொழிச்சிலேடை.

40. எவ்வா யினுமுயர்ந்தோர் இன்னறிவும் மாகதரும்
செவ்வாய் வழுத்தடுக்கும் சிங்கையே - வெவ்வாய்
நரககட கத்தினான் நண்ணிவிடாது எண்ணும்
உரககட கத்தினான் காப்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : வெவ்வாய் + நரக கடகத்தில் + நான்நண்ணிவிடாது + எண்ணும் + உரகம் + கடகத்தினான் + காப்பு ; எவ்வாயினும் + உயர்ந்தோர் + இன்அறிவும் + மாகதரும் + செவ்வாய் + வழுத்து + அடுக்கும் சிங்கை.

**குறிப்புரை** : வெவ்வாய்= கொடிய இடம். நரக கடகத்தில்= நரகர் உலகில். நான் நண்ணிவிடாது எண்ணும்= நான் நெருங்காதிருக்க நினைக்கும். உரக கடகத்தினான்= நாகத்தைக் கடகமாக அணிந்த சிவபிரான் . காப்பு= காப்பது. எவ்வாயினும்= எல்லாவழிகளிலும். மாகதர்= வீரத்தைப் புகழ்வோர்.செவ்வாய்= சிறந்த சொற்கள். வழுத்தடுக்கும்= குற்றம் நிகழாமல் தடுக்கும்.

**பொழிப்புரை** : கொடியவிடமுடைய நரகத்தை நான் நெருங்காதிருக்க எண்ணுகிறவனும், நாகத்தைக் கடகமாக அணிந்தவனுமாகிய சிவபிரான் காக்குமிடம்; எல்லாவழிகளிலும் உயர்ந்தவர்களின்இனியஅறிவும், வீரத்தைப் புகழ்வோர் சொற்களும் குற்றம் நிகழாமல் தடுக்கும் சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : வாய் - இடவாகுபெயர். வழுத்தடுக்கும் - பிரிமொழிச்சிலேடை.

41. ஈகையற்ற வஞ்சரையும் எண்நான்கு அறங்களையும்
சேகரித்து மெய்ப்புணர்த்தும் சிங்கையே - சாகரத்தை

உண்ட வருக்கொளியார் ஓராயி ரங்கதிர்வாள்
விண்ட வருக்கொளியார் வீடு.

**மடக்கடிபிரிப்பு + கூட்டுமுறை** : சாகரத்தை உண்டவருக்கு + ஒளியார்; ஓராயிரம் + கதிர்வாள் + விண்டு + அவருக்கு + ஒளியார் வீடு; ஈகையற்ற வஞ்சரையும் சேகரித்து மெய்ப்பு உணர்த்தும் சிங்கை, எண்நான்கு அறங்களையும் சேகரித்து மெய்ப்பு உணர்த்தும் சிங்கை.

**குறிப்புரை** : சாகரத்தை உண்டவர்= கடலினைக் குடித்த அகத்தியர். ஒளியார் = ஒளிந்துகொள்ளாதவர், கதிர்வாள்= கதிரொளியை.. விண்டு= வெளிப்படுத்தி. அவருக்கு ஒளியார்= அவ்வகத்தியர்க்குக் காட்சிதந்த சிவபிரான். வீடு= வாழிடம். சேகரித்து= கூட்டி. மெய்ப்பு உணர்த்தும்= உண்மை - அறம்- உணர்த்தும்.

**பொழிப்புரை** : கடலினைப் பருகிய அகத்தியர்க்குக் காட்சிதர ஒளிந்துகொள்ளாதவராய், ஓராயிரம் கதிரொளியை வெளிப்படுத்தி அவர்க்குக் காட்சிதந்த சிவபிரான் வாழிடம்; கொடுக்கும் குணமில்லாத வஞ்சகர்களைக்கூட்டிவைத்து அறத்தினை உணர்த்துவதும், முப்பத்திரண்டு அறங்கங்களையும் ஒருசேரச் செய்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சிவபிரானின் திருமணக்காட்சியைக் கயிலையில்காண மக்கள்திரண்டதால் வடக்குத்தாழ, தெற்கு உயர்ந்தது. பூமியைச் சமநிலைப்படுத்தச் சிவபிரான், அகத்தியரைத்தென்திசை செல்லக் கூறினார். அகத்தியர் அத்திருமணம் காணவேண்டும் என்ற ஆசையைக் கூறி வேண்ட, தெற்கில் திருமணக்காட்சி தருவதாகக் கூறியபடி பொதிகையில் அக்காட்சியை அகத்தியர்க்கு வழங்கியதை இது குறிக்கிறது.

**இலக்கணக்குறிப்பு** : உண்டவருக்கு - வினையாலணையும் பெயர். சேகரித்து மெய்ப்பு உணர்த்தும் - செம்மொழிச்சிலேடை.

42. தூயநிலை வாய்மையரும் தொல்லைமனு நூல்நெறியும்
தீய வழுக்கறுக்கும் சிங்கையே - நேயம்
எடுத்த திகம்பரத்தார் ஏத்தஅருள் செய்வார்
உடுத்த திகம்பரத்தார் ஊர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நேயம் + எடுத்து + அதிகம் + பரத்தார் + ஏத்த + அருள்செய்வார் + திக்கு + அம்பரத்தார் + ஊர்; தூயநிலை = வாய்மையரும் + தீயவழுக்கறுக்கும் + சிங்கை; தொல்லைமனு நூல்நெறியும் = தீய + அழுக்கு + அறுக்கும்சிங்கை.

**குறிப்புரை** : நேயம் எடுத்து= அன்பை ஏற்று. அதிகம் பரத்தார்= மிகுதியும் அலமரச்செய்யாதவர். ஏத்த அருள்செய்வார்= தன்னைப்போற்ற அருள்கிறவர். உடுத்த= ஆடையாக உடுத்த. திக் அம்பரத்தார்=திசைகளை உடுத்த சிவபிரான். தூயநிலை வாய்மையர்= அறநெறியில்நிற் கும் வாய்மையாளர். தீய வழுக்கு கறுக்கும்= தீங்குதரும் குற்றங்களை தீய்க்கும். பழைமையான. மனுநூல் நெறி= மனுநூல் கூறும் அறம். தீய அழுக்கு அறுக்கும்= தீங்குதரும் பொறாமையைக் களையும்.

**பொழிப்புரை** : அன்பைமிகஏற்று அலமரச்செய்யாதவரும், தன்னனப்போற்றுவார்க்கு அருள்கிறவரும் திசைகளை ஆடையாக உடுத்தவரும் ஆகிய பாவநாசர் வாழும் ஊர்; அறநெறியில்வாழும் வாய்மையர் தீங்குதரும் குற்றங்களைத் தீய்ப்பதும், பழைமையான மனுநூல் கூறும் அறநெறிகள் தீங்குதரும் பொறாமையைக் களைவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : திசைகட்கு எல்லையில்லையாதலின் அதனை உடுத்தவனும் எல்லையில்லாதவன் என்பதைக்குறிப்பது திகம்பரன் என்பது

**இலக்கணக்குறிப்பு** : தீயவழுக்கறுக்கும் - பிரிமொழிச்சிலேடை

43. வெய்ய **மிடியும்** விரிபொருநை வெண்திரையும்
செய்யவ ளங்கொழிக்கும் சிங்கையே - ஐயர்
துவளக் குழையார் துடி இடையார் சங்கத்
தவளக் குழையார் தலம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : துடிஇடையார் + துவள + ஐயர் + குழையார். சங்கத் தவளக் குழையார் தலம்; வெய்யமிடியும் + செய்யவள் + அங்குஒழிக்கும் சிங்கை; பொருநை வெண்திரை + செய்ய + வளம்கொழிக்கும் சிங்கை

**குறிப்புரை** : துடி இடையார்= உடுக்கை ஒத்த இடையுடைய அருள்தருஉலகம்மை.. துவள= சோர்வு பெற. குழையார் ஐயர்= சோர்வடையாதவர் பாவநாசர். தவள சங்கக் குழையார்= வெள்ளிய சங்குக்காதணி அணிந்த பாவநாசர். தலம்- இருப்பிடம் வெய்ய மிடியும்= கொடிய வறுமையையும். செய்யவள்= திருமகள். அங்கு ஒழிக்கும்= அவ்விடத்தில் ஒழிப்பதும். வெண்திரை= வெள்ளிய அலை. செய்ய வளம்கொழிக்கும்= சிறந்த வளங்களை ஒதுக்கும்.

**பொழிப்புரை** : உடுக்கை ஒத்தை இடையுடைய அம்மை சோர்வடைந்தாலும், சங்கினாலான காதணி அணிந்த தலைவராகிய பாவநாசர் சோர்வடையாத தலம், கொடிய வறுமையைத் திருமகள் ஒழிப்பதும், பொருநையின் வெள்ளிய அலைகள் தம்வளத்தை ஒதுக்கும் இடமும் ஆகிய சிங்கையாகும்.

**இஅக்கணக்குறிப்பு** : செய்யவளங்கொழிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

44. பூவகத்தில் போர்கடந்த பூட்கையும்வில் வேட்கையரும்
சேவகத்தி லேவழங்கும் சிங்கையே - பாவகத்தில்
ஒக்க வருவார் ஒருவரெனில் வே(று)உணரத்
தக்க வருவார் தலம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பாவகத்தில் ஒக்கவருவார் ஒருவர் எனில் பாவகத்தில் வேறு உணரத்தக்க வருவார் தலம்; பூவகத்தில் போர் கடந்த பூட்கையும் சே அகத்திலே வழங்கும் சிங்கை; வேல் வேட்கையரும் சேவகத்திலே வழங்கும் சிங்கை.

**குறிப்புரை** : பாவகத்தில்= மனம்பாவித்தலில். ஒருவர் ஒக்க வருவாரெனில்= ஒப்பற்றவர் அம்மையப்பனாக ஒருவராக ஒத்தநிலையில் வருவார் என்றால், பாவகத்தில் வேறு உணரத்தக்க வருவார்= பாவித்தலில் அம்மையாகவும் அப்பனாகவும் வேறுவேறாக வருகிறவர். பூவகத்தில்= பூவுலகில். போர்கடந்த = போரை விலக்கிய - கைவிட்ட. பூட்கை= உயர்குறிக்கோள். சே அகத்திலே வழங்கும்= உயர்ந்த உள்ளத்தில் இடைவிடாதுமேற்கொள்ளும். வில் வேட்கையர்= வில் ஏந்தும்விருப்புடைய வீரர்கள். சேவகம்= வீரம்காட்டும் தொழில். வழங்கும்= இடையறாது மேற்கொள்ளும்.

**பொழிப்புரை** : சிவபெருமான் நம்மனத்தின் பாவனையில் அம்மையும் அப்பனுமாக ஒத்தநிலையில் - அம்மையப்பராக வருகிறவரென்றால், இருவரையும் வேறுவேறாக - தனித்தனியே நாம் உணரத்தக்கவாறும் வருகிறவர் தலம்; இவ்வுலகில் போரை விலக்கிய - கைவிட்ட உயர்குறிக்கோளை இடைவிடாது தனது உள்ளத்தில் மேற்கொள்ளும் இடமும், வில்லேந்திப் போரிடும்வீரர்கள், வீரம்காட்டும் தொழிலை இடையறாது மேற்கொள்ளுமிடமும் சிங்கையாகும்.

**விளக்கம்** : சிவபிரான் நம்பாவனையின்படி, அம்மையப்பராகவும் - " அம்மையோடு அப்பனாகிச் செறிவு ஒழியாத சிவமாகவும் வருவார்; அம்மையும் அப்பனுமாகத் தனித்தனிகோலத்திலும் வருவார். நம் பாவனை எப்படியோ அப்படிக்காட்சி தருவார் என்றார்.

**இல்க்கணக்குறிப்பு** : சேவகத்திலே வழங்கும் - பிரிமொழிச்சிலேடை.

45. மாவாய்மைத் தொண்டர் மணிவாயும் நன்மனமும்
தேவாரப் பண்பாடும் சிங்கையே - ஓவாமல்
சீலமிசைந் துள்ளார் தெரிவரியார் தெண்டிரைநீர்
ஆலமிசைந் துள்ளார் அகம்.

**மடக்கடி பிரித்தல் +** கூட்டுமுறை : ஓவாமல் சீலம் இசைந்துள்ளார், தெண்டிரைநீர் ஆலம் மிசைந்துள்ளார் தெரிவரியார் அகம்; மாவாய்மைத் தொண்டர் மணிவாய் தேவாரப்பண் பாடும் சிங்கை; மாவாய்மைத் தொண்டர் நன்மனம் தே வாரப்பண்பு ஆடும் சிங்கை.

**குறிப்புரை** : ஓவாமை= இடைவிடாமல். சீலம் இசைந்துள்ளார்= நல்லொழுக்கத்தில் பொருந்தியோர். தெண்டிரை நீர்= பாற்கடல். ஆலம் மிசைந்துள்ளார் அகம்= நஞ்சுண்டவர் வாழிடம். மணிவாய் தேவாரப்பண் பாடும்= அழகியவாய் தேவாரப்பண்களைப் பாடும். தே வாரப் பண்பு ஆடும்= தெய்வத் தன்மையுடைய அன்புப்பண்பில் திளைக்கும்.

**பொழிப்புரை** : இடைவிடாமல் நல்லொழுக்கத்தில் பொருந்தியவர்களும், பாற்கடலில் எழுந்த நஞ்சினை உண்ட யாராலும் தெரிவதற்கு அரியவரும் ஆகிய சிவபிரான் வாழிடம்; சிறந்த வாய்மையாளராகிய தொண்டர்களின் அழகியவாய், தேவாரப்பண்களைப் பாடுமிடமும், அத்தகு தொண்டர்களின் மனம் தெய்வத்தன்மையுடைய அன்புப்பண்பில் திளைக்குமிடமும் சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தேவாரப்பண்பாடும் - பிரிமொழிச்சிலேடை.

46. நீதியும்மென் புட்குலத்தோர் நீள்சிறைய புள்ளினமும்
தீதின வந்தடுக்கும் சிங்கையே - பாதி
மரகதமே விட்டார் வழுதிஎதிர் சம்புக்
குரகதமே விட்டார் குடி

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பாதி மரகதம் மேவிட்டார்,வழுதிஎதிர் சம்புக் குரகதமே விட்டார் குடி; நீதியும் தீ தினம் வந்து அடுக்கும் சிங்கை. மென்புட்குலத்தோர் நீள்சிறைய புட்குலமும் தீ தினம் வந்து அடுக்கும் சிங்கை.

**குறிப்புரை** : பாதி= உடம்பில் பாதியை. மரகதமே விட்டார்= பசிய நிறத்து அம்மைக்குத்தந்தவர். வழுதி எதிர பாண்டியன் கண்ணெதிரில். சம்புக் குரகதம்= நரியாகிய குதிரை. விட்டார்= தந்தவர். நீதியும்= அறக்கடவுளும். தீ தினம்வந்து அடுக்கும்= தீமையை நாடோறும் வந்து கொல்லும். நீள்சிறைய புள் இனம்= நீண்டசிறகுடைய பறவையினங்கள். தீ தினம்= இனிய நாட்களில். வந்து அடுக்கும்= வந்து சேரும்.

**பொழிப்புரை** : தனது உடம்பில்பாதியைப் பசியநிறமுடைய அம்மைக்குத் தந்தவரும், பாண்டியன் கண்ணெதிரே நரிகளாகிய குதிரைகளைத் தந்தவரும் ஆகிய சிவபிரான் குடியிருப்பது; அறக்கடவுள் நாடோறும்வந்து தீமையைக்கொல்வதும், நீண்ட சிறகுடைய பறவைக்கூட்டம் இனியநாட்களில் வந்து சேர்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : நரிகளைக் குதிரைகள் ஆக்கிப் பாண்டியனிடம் கொடுத்தது :

" நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும் " ( திருவாச. கீர்த்தித். 36 )
" பாண்டியன் தனக்குப் பரிமா விற்று ( திருவாச. கீர்த்தித். 37 )

**47.**

வேறற் கரும்பகையும் வேழமதம் பாய்நிலமும்
சேறற் கருமையவாம் சிங்கையே - மாறற்கு
வெப்பழிக்கும் நீற்றினார் மேவார் புரமெரிவந்
தப்பழிக்கு நீற்றினார் சார்பு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : மாறற்கு வெப்பு அழிக்கும் நீற்றினார், மேவார் புரம்எரி வந்தப் பழிக்கு நீற்றினார் சார்பு ; வேறல்கு அரும்பகை சேறல்கு அருமையவாம் சிங்கை, வேழமதம்பாய் நிலமும் சேறு அல் கருமையவாம் சிங்கை.

**குறிப்புரை** : மாறற்கு= பாண்டிய மன்னனின். வெப்பு அழிக்கும் நீற்றினார்= வெப்புநோயைத் தீர்க்கும் திருநீறுடையவர். மேவார்புரம் எரிவந்து அப்பழிக்கு= முப்புரஅசுரரின் முக்கோட்டைகளும்எரித்த அப்பழிக்கு, திருநீறணிந்தவர் சார்ந்த இடம்; வேறற்கு அரும்பகை= வெல்ல இயலாத பெரும்பகையும். சேறற்கு அருமையவாம்= வந்தடைதலில்லாததும், வேழமதம் பாய்நிலம்= யானையின் மதநீர் பாய்ந்த நிலம். சேறு அல் கருமையவாம்= சேறாகிக் இருள்போல் கரிய நிறமுடன் விளங்குவதும்.

**பொழிப்புரை** : பாண்டியமன்னனின் வெப்புநோயை அழிக்கும் திருநீறுடையவரும்; பகைவர்களின் முப்புரங்களையும் எரித்த அந்தப்பழிக்காகத் திருநீருடையவரும் ஆகிய சிவபிரான் சார்ந்துள்ள ஊர்; வெல்ல இயலாத பெரிய பகைஇல்லாததும், யானையின் மதநீர் பாய்ந்த நிலம் சேறாகி இருள்போல் கரியநிறமுடன் விளங்குவதும் ஆகியசிங்கையாகும்.

**விளக்கம்** : பாண்டிய மன்னனின் வெப்புநோய் தீர, ஆலவாயண்ணலை நினைந்து பதிகம் பாடி, நீறுசாத்த வெப்புத்தீர்ந்தது : பாடியபதிகம் திருநீற்றுப்பதிகமாகிய

" மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு "

என்று தொடங்குவது.

**இலக்கணக்குறிப்பு** : சேறற் கருமையவாம் - பிரிமொழிச்சிலேடை.

**48.**

பத்தி தருவிழவும் பன்மா ளிகையும் முன்னாள்
சித்திரைமா தங்குலவும் சிங்கையே - புத்திரராம்
தார்க்குஞ் சரமயிலான் தாதைஒரு பாதிதனைப்
பார்க்குஞ் சரமயிலான் பற்று.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : தார்ப் புத்திரராம் குஞ்சரம் அயிலான் தாதை, ஒருபாதிதனைப் பார்க்கும் சரம் அயிலான் பற்று; பத்தி திருவிழவும் சித்திரைமாதம் குலவு சிங்கை. பன்மாளிகைமுன் ஆள் சித்திரை மாது அங்கு உலவும் சிங்கை.

**குறிப்புரை** : குஞ்சரம்= விநாயகன். அய்லான்= வேலேந்திய முருகன். ஒருபாதிதனைப் பார்க்கும்= தனது ஒருபாதியாகிய உமையவளைக் காணும். சரம் அயிலான்= தனி அழகன். குலவும்= சிறந்துவிளங்கும்.

**பொழிப்புரை** : மாலயணிந்த தன்மகன்களாகிய விநாயகர், வேலேந்திய முருகன் ஆகியோர்க்குத் தந்தையும், தனது ஒருபாதியில் உள்ள உமையவளைக் காணும் தனி அழகனும் ஆகிய சிவபிரான் வாழூர்; பத்திமை தரும் திருவிழாக்கள் சித்திரைமாதத்தில் முன்னாளில் சிறந்து விளங்குவதும், மாளிகைகள் பலவற்றின் முன் வேலையாட்களும், அழகியபதுமை ஒத்த பெண்களும் உலவுவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சித்திரை மாது அங்கு - சித்திரை - ஐகாரம் சாரியைமுன்னாள் சித்திரைமா தங்குலவும் - பிரிமொழிச்சிலேடை.

49. பிந்தாத நல்லறமும் பேராயர் வேய்ங்குழலும்
சிந்தா குலம்தணிக்கும் சிங்கையே - சந்தார்
புளகத் தனத்தாள் பூட்டுகுறி மார்பத்
துளகத் தனத்தினான் ஊர்.

**மடக்கடிபிரித்தல் + கூட்டுமுறை** : சந்து ஆர் புளகத் தனத்தாள் மார்பத்துப் பூட்டுகுறிஉள கத்தன் அத்தினான் ஊர்; பிந்தாத நல்லறமும் சிந்தா குலம் தணிக்கும் சிங்கை; பேராயர் வேய்ங்குழலும் சிந்தாகுலம் தணிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : சந்து ஆர்= சந்தனம்பூசிய. புளகத்தனத்தாள்= பருத்த தனங்களையுடய அம்மை. பூட்டுகுறி= பதித்த முலைச்சுவடு. கத்தன்= கருத்தா - சிவபிரான். அத்தினான்= எலும்பணிந்தவன். பிந்தாத= தோல்வியுறாத. நல்லறம். சிந்தா குலம் தணிக்கும்= சிதையாதவாறு குலத்தினைக் குளிர்விக்கும். பேராயர் வேய்ங்குழல்= சிறந்த ஆயர்களின் புல்லாங்குழல். சிந்தாகுலம் தணிக்கும்= மனவருத்தத்தைத் தணிக்கும்

**பொழிப்புரை** : சந்தனம்பூசிய பருத்த முலைகளுடைய அம்மை, மார்பில் பதித்த முலைச்சுவடு உள்ள கருத்தாவும் எலும்பணிந்தவனும் ஆகிய சிவபிரான் ஊர்; தோல்வியுறாத சிறந்த அறங்கள் குலத்தினைச் சிதையாதவாறு குளிர்விப்பதும், சிறந்த ஆயர்களின் புல்லாங்குழல்இசை கேட்பவர் மனவருத்தத்தைத் தணிப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : இசை, கேட்பவர் வருத்தத்தைத் தணிக்கும் என்பதுடன், பயிர்களை வளர்க்கும் என்பதும் நடைமுறை அனுபவமும் அறிவியல் முடிவும் ஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : சிந்தாகுலம் தணிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

50. வேய்வனமும் போர்க்களத்து வீரர்அடு செஞ்சரமும்
தீவனமா கத்தாக்கும் சிங்கையே - நோவல்முன்
தந்துபர சண்டன் சமர்விளைப்ப மார்க்கண்டன்
வந்துபர சண்டன் மனை.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பர சண்டன் முன்நோவல்தந்து சமர் விளைப்ப, மார்க்கண்டன் வந்து பரசு அண்டன் மனை; வேய்வனமும் தீவனம் ஆகத் தாக்கும் சிங்கை; போர்க்களத்து வீரர் அடு செஞ்சரம் தீ வனம் ஆக்கும் சிங்கை.

**குறிப்புரை** : பர சண்டன் = பழைமையான சண்டாசுரன். முன்நோவல் தந்து சமர்விளைப்ப= முற்காலத்தில் துன்பம் தந்து போரிட. மார்க்கண்டன் வந்து பரச= மார்க்கண்டேயர் வந்து வணங்கும் அண்டத்துத் தலைவன் வீடு. வேய்வனம்= மூங்கில்காடு. தீவனம் ஆகத் தாக்கும்= மாடுகளுக்கு உணவாக விளங்கும் இடமும், வீரர் அடு சரம்= வீரர்கள் பகைவரைக்கொல்ல எய்யும் அம்பு. தீ வனமாகத் தாக்கும்= தீக்காடு ஆகுமாறு தாக்குவதும் சிங்கையே.

**பொழிப்புரை** : பழைமையான சண்டாசுரன் முற்காலத்தில் துன்பந்தந்து போரிடவும், மார்க்கண்டர் வந்து வணங்கவும் உள்ள அண்டத்தலைவன் வீடு; மூங்கில்காடு மாடுகளுக்குத் தீவனமாக - உணவாக

விளங்கும் இடமும், போர்க்களத்தில் வீரர்கள் பகைவரைக்கொல்ல எய்யும் அம்பு தீக்காடு ஆகுமாறு தாக்குவதும் சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீவனமாகத் தாக்கும் - பிரிமொழிச்சிலேடை.

51. அன்னம் துணர்க்கமலத்(து) ஆடவர்கள் கோமருகில்
சின்னம் துவைத்(து)ஆர்க்கும் சிங்கையே - பொன்னம்
பலவிருப்ப ரானார் பழம்புவன கோடி
பலவிருப்ப ரானார் பதி.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பொன்னம்பல விருப்பர் ஆனார் பழம்புவனகோடிபல இருப்பர் ஆனார் பதி; அன்னம் துணர்க்கமலத்துச் சின்னம் துவைத்து ஆர்க்கும் சிங்கை. ஆடரவர்கள் கோமருகில் சின்னம் துவைத்து ஆர்க்கும் சிங்கை.

**குறிப்புரை** : விருப்பர்= விருப்பமுடையவர். ஆனார்= ஆன சிவபிரான். பலகோடி பழம்புவன இருப்பர் ஆனார்= பலகோடிக்கணக்கான பழையஉலகங்களிலும் இருப்பவரானார். துணர்= இதழ். ஆடவர்=ஆண்மக்கள். கோமருகு= அரசுலாம் தெரு. சின்னம் துவைத்து= விசித்திர ஒலிஎழுப்பி. சின்னம் = மங்கல இசை

**பொழிப்புரை** : தில்லைப்பொன்னம்பலத்தில் இருக்கும் விருப்பமுடையவராய், பழமையான பலகோடிக்கணக்கான உலகங்களிலும் இருப்பவர் இடம்; அன்னபறவைகள் இதழ்கள் பலஉடைய தாமரைமலரில் இருந்துகொண்டு, விசித்திரமான ஒலிகளை எழுப்பி ஆரவாரிக்கும் கலைசை; ஆண்மக்கள் அரசுலாம்தெருவில் மங்கல ஒலியை இசைகருவிகள் பலவற்றை எழுப்பி ஆரவாரிக்கும் கலைசை.

**விளக்கம்** : நாம் பலவகைச் சொற்கள் மூலம் பலவகைக்கருத்துகளை வெளிப்படுத்துவதுபோல் அஃறிணை உயிர்களும் தம்கருத்துகளைப் பலவகை ஒலிகள் மூலம் பரிமாறிக் கொள்கின்றன என்பர்.

**இலக்கணக்குறிப்பு** : சின்னம் துவைத்து - செம்மொழிச்சிலேடை.

52. ஐய பசுந்தமிழும் ஆற்றின்நூல் அந்தணரும்
செய்ய மகம்புரியும் சிங்கையே - சையம்
தருகுமா ரத்தியார் தம்தலைவர் வேணி
செருகுமா ரத்தியார் சேர்வு.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : சையம் தரு குமாரத்தியார்தம் தலைவர், வேணி செருகும் ஆர் அத்தியார் சேர்வு; ஐய பசுந்தமிழும் செய்ய மகம்புரியும், நூல் ஆற்றின் அந்தணரும் செய்ய மகம் புரியும் சிங்கை.

**குறிப்புரை** : சையம்= மலை - இமயம். குமாரத்தியார் தம்= பார்வதிதேவிக்கு. தலைவர்= கணவர் வேணி செருகு= சடையில் செருகிய. ஆர் அத்தியார்= கொன்றை ஆத்திமலர்களுடையவர். ஐய= அழகிய. பசுந்தமிழ்= வளமான தமிழ். செய்ய மகம் புரியும்= சிறந்த இன்பம் தரும். நூல் ஆற்றின்= வேதநூல் வழி. செய்ய மகம்புரியும்=ம் சிறந்த வேள்விசெய்யும்.

**பொழிப்புரை** : இமயத்து இமவான் மகளாகிய பார்வதிதேவிக்குக் கணவரும், தன்சடையில் செருகியகொன்றை ஆத்தி மலர்களுடையவரும் ஆகிய சிவபிரான் சேர்ந்துள்ள இடம்; அழகிய வளமான தமிழ் சிறந்த இன்பம் தருமிடமும், வேதநூல் விதிப்படி அந்தணர்கள் வேள்வி செய்யுமிடமும் ஆகிய கலைசையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : அத்தியார்= ஆத்தி என்பதன் முதல்குறுக்கம் - செய்யுள் விகாரம். செய்ய மகம் - செம்மொழிச்சிலேடை. .

53. பந்தித்த கச்சுமினார் பாடகப்பூந் தாள்நடையும்
சிந்தித் தனம்திரியும் சிங்கையே - பந்திக்
குடிலச் சடையார் கொடியனைப்பாழ்ம் பீறல்
குடிலச் சடையார் குடி.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : பந்திக் குலம் சடையார், கொடியனைப் பாழ்ம்பீறல் குடில் அச்சு அடையார் குடி; மினார் பந்தித்த கச்சு சிந்தித்து அனந்து இரியும் சிங்கை, பாடகப்பூந்தாள் நடைசிந்தித்து அனம் திரியும் சிங்கை.

**குறிப்புரை** : பந்திக் குலம் சடையார்= புகழ்வாய்ந்த அழகிய சடையுடையவர் - சிவபிரான். கொடியனை= கொடியவனாகிய என்னை. பாழ்ம் பீறல் குடில் அச்சு அடையார்= பாழான துளைகளுடைய குடிசையாகிய உடம்பில் அடைக்காதவர் - பிறவிதராதவர். குடி= வீடு. பந்தித்த கச்சு சிந்தித்து அனந்து இரியும்= முலையில்கட்டிய கச்சு,நன்கு இடம்எண்ணி விம்மிக் கிழியும். பாடகப் பூந்தாள் நடையும்=, பாடகம் என்ற கால்அணி அணிந்த அனிச்சமலரினும் மென்மையான பாதங்களுடைய மகளிர். சிந்தித்து அனம் திரியும்= நடைகற்க ஆராய்ந்து அன்னப்பறவைபின்னே திரிகின்ற சிங்கை.

**பொழிப்புரை** : புகழ்வாய்ந்த அழகிய சடையுடையவரும், கொடியவனாகி என்னை மீண்டும் பாழானதும் துளைகளுடையதும் ஆகிய குடிசையாகிய உடம்பில் அடைக்காதவரும் ஆகிய சிவபிரான் குடிஇருப்பு ; முலைகளில் கட்டிய கச்சு நன்கு இடம்எண்ணி விம்மிக்கிழிவதும் , பாடகம் என்னும் கால் அணி அணிந்த அனிச்சப்பூவினினும் மென்மையான பாதங்களுடைய மகளிர், நடைகற்க ஆராய்ந்து அன்னப்பறவை பின் திரிவதும் ஆகிய சிங்கையாகும்

**விளக்கம்** : மாதர் அடி மிகமிக மென்மையானது :

" அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம் " ( திருக்குறள்1120 )

**இலக்கணக்குறிப்பு** : சிந்தித் தனந்திரியும் - பிரிமொழிச்சிலேடை.

54. மெய்ம்மாண் பினர்உளமும் மெல்லியலார் மெய்ச்சுணங்கும்
செம்மாந் துணர்விலகும் சிங்கையே - பெம்மான்
கணிச்சிகரத் தாற்றினான் காமருபூந் தென்றல்
மணிச்சிகரத் தாற்றினான் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : கணிச்சி கரத்து ஆற்றினான், காமருபூந் தென்றல் மணிச் சிகரத்து ஆற்றினான் பெம்மான் வாழ்வு; மெய்ம்மாண்பிணர் உளமும் செம்மாந்து உணர்வு இலகும் சிங்கை, மெல்லியலார் மெய்ச்சுணங்கும் செம் மாந்துணர் விலகும் சிங்கை

**குறிப்புரை** : கணிச்சி கரத்து ஆற்றினான்= மழுப்படையைக் கையில் ஏந்தியவன், காமரு பூந்தென்றல்= விரும்பத்தக்க மென்மயான தென்றலை. மணி= அழகிய. சிகரத்து ஆற்றினான்= மலையில் - பொதிகைமலையில் வைத்தவன். மெய்ம்மாண்பினர் உளம்= ஞானமாண்பினர் மனம். செம்மாந்து உணர்வு இலகும்= மிகக்களிப்புடன் கூடிய நல்லுணர்வில் விளங்கும்; மெல்லியலார் மெய்ச்சுணங்கு= மென்மையான

இயல்புடைய மகளிர் உடம்பில் உள்ள பொற்சுணங்கு. செ மாந்துணர் விலகும்= மாமரத்தின் சிவந்த தளிரை வெல்லும்.

**பொழிப்புரை** : மழுப்படையைக்கையில் ஏந்தியவனும், தென்றலை அழகிய பொதிகைமலையில் வைத்தவனுமாகிய சிவபிரான் வாழிடம்; ஞானமாண்பினர் மனம் மிக்ககளிப்புடன்கூடிய நல்லுணர்வில் விளங்குவதும், மென்மையான இயல்புடைய மகளிரின் உடம்பில் உள்ள பொற்சுணங்கு மாமரத்துச் செந் தளிரை வெல்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செம்மாந்துணர்விலகும் - பிரிமொழிச்சிலேடை.

55. மைந்தரயில் வேல்வலியில் வாம்புரவித் தேரேற்றில்
செந்தி னகரனைநேர் சிங்கையே - அந்தி
திறம்பழகு மெய்யினார் சின்மயவே தாந்தத்
திறம்பழகு மெய்யினார் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : அந்தி திறம்பு அழகு மெய்யினார், சின்மய வேதாந்தத் திறம் பழகு மெய்யினார் சேர்வு; மைந்தர் அயில் வேல் வலியில் செந்தில் நகரனைநேர் சிங்கை; வாம்புரவித் தேர் ஏற்றில் செந் தினகரனை நேர் சிங்கை.

**குறிப்புரை** : அந்தி திறம்பு= செவ்வானமும் மனம்மாறுபடும் - வெட்கும். மெய்யினார்=திருமேனியர். சின்மய= ஞானமயமான. வேதாந்தத்திறம்= உபநிடதம் கூறும் தத்துவம். பழகு மெய்யினார்= நிலைத்த ஞானியாகிய சிவபிரான். மைந்தர் அயில்வேல் வலியில்= வீரர்கள் கூரிய வேலினைக் கையாளும் வலிமையில். செந்தில் நகரனை நேர்= செந்தில் முருகப்பிரானை ஒத்தவராய் விளங்குவதும். மைந்தர் வாம்புரவித் தேர் ஏற்றில்= வீரர்கள் தாவிச்செல்லும் குதிரைகள்பூட்டிய தேரினைச் செலுத்துவதில். செம் தினகரனை நேர்=சிவந்த சூரியனை ஒக்கும்.

**பொழிப்புரை** : செவ்வானமும் வெட்கும் செந்நிறத்தரும், ஞானமயமான உபநிடதம் கூறும் தத்துவத்தில் நிலைத்த ஞானியும் ஆகிய சிவபிரான் சேர்ந்துள்ள இடம்; வீரர்கள் கூரிய வேலினைக் கையாளும் வலிமையில் திருச்செந்தூர் முருகப்பிரானை ஒத்துவிளங்குவதும், வீரர்கள் தாவிச்செல்லும் குதிரைகள் பூட்டிய தேரினைச் செலுத்துவதில் செந்நிறத்துச் சூரியனை ஒத்துவிளங்குவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செந்தினகரனை - பிரிமொழிச்சிலேடை.

56. கானாறு நாண்மலரில் கன்னல் பெரும்பணையில்
தேனாறு கால்பாயும் சிங்கையே - ஊனாற
உண்டவரை வில்லார் உலகேழும் உண்டசரம்
கொண்டவரை வில்லார் குடி.

**மடக்கடி பிரிப்பு + கூடுமுறை** : ஊன்நாற உண்ட வரைவில்லார், உலகு ஏழும் உண்ட சரம் கொண்ட வரைவுஇல்லார் குடி; கான்நாறு நாள்மலரில் தேன் ஆறுகால்பாயும் சிங்கையே, கன்னல் பெரும்பண்ணையில் தேன்ஆறு கால் பாயும் சிங்கையே.

**குறிப்புரை** : ஊன்நாற= புலால் நாற. உண்ட= கொன்ற. வரைவில்லார்= மேருமலையை வில்லாக ஏந்தியவரும், உலகு ஏழும் உண்டவரை= ஏழுலகையும் உண்டவராகிய திருமாலை. சரம்கொண்டார்= அம்பாகக்கொண்டவர். வரை வில்லார்= எல்லையில்லாதவர். குடி= வாழிடம்; கான் நாறு நாள்மலரில்=

மணம் கமழும் புதுமலரில். ஆறுகால் தேன் பாயும்= ஆறுகால்களுடைய வண்டுகள் பாய்வதும். கன்னல் பெரும்பணையில்= கரும்பு உள்ள பெரிய நன்செய்யில். தேன்ஆறு கால்= தேன் ஆறாகக் கால்வாய் வழி.

**பொழிப்புரை** : புலால் நாறுமாறு அசுரர் மூவரையும் கொன்றவராய் மேருமலையை வில்லாக ஏந்தியவரும், ஏழு உலகை உண்டவருமாகிய திருமாலை அம்பாகக் கொண்ட எல்லையற்றவரும் ஆகிய சிவபிரான் குடியிருப்பது; மணம்கமழும் புதுப்பூவில் ஆறுகால்களுடைய வண்டுகள் பாய்வதும், கரும்பு வளரும் பெரியநன்செய்யில் தேன் ஆறாகக் கால்வாய்வழி பாய்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : முப்புர எரிக்குச் சிவபிரான் ஏந்தியவை :

" நாண்என்றால் நஞ்சுஇருக்கும், நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் "

என்பதுவரை இரட்டைப்புலவர்கள் பாடி மேல் தொடரவியலாமல் செல்ல, பின்னாளில் திருவாரூர்வந்த காளமேகப்புலவர் பாடலின் சுவைகண்டு முடித்த எஞ்சியபகுதி வருமாறு :

" மண்தின்ற - பாணமே
சீராரூர் மேவும் சிவனேநீ எப்படியோ
நேரார் புரம்எரித்த நேர் " என்பது. ( தனிப்பாடல் திரட்டு )

தம்பாடலை நிறைவு செய்து பாடிய காளமேகப்புலவரைக் காணத் துடித்து அவரைத் தேடியலைந்த இரட்டையர், காளமேகரைக் காணவியலாது, அவர்சிதை தீப்பற்றி எரிவது கண்டு பாடியது :

" ஆசு கவியால் அகில உலகெங்கும்
வீசு புகழ்காள மேகமே - பூசுரா !
விண்கொண்ட செந்தழலில் வேகுதே ஐயையோ
மண்தின்ற பாணம்என்ற வாய் " ( தனிப்பாடல் திரட்டு )

என்றுபாடித் தேம்பினர் என்பது வரலாறு.

**இலக்கணக்குறிப்பு** : தேனாறுகால் பாயும் - பிரிமொழிச்சிலேடை.

57. மூரல் அரும்பு முருக்கினரும் மொய்ம்பினரும்
சேரலரைக் கூழையில்சூழ் சிங்கையே - சாரல்
அலைய மலையார் அருவி குதிபாயும்
மலைய மலையார் மனை.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : மலைஆர் சாரல் அலைய, அருவி குதிபாயும் மலைய மலையார் மனை; அரும்பு மூரல் முருக்கினரும் சேரலரைக் கூழையில் சூழ் சிங்கையே; மொய்ம்பினரும் சேரலரைக் கூழையில் சூழ் சிங்கை.

**குறிப்புரை** : மலைஆர் சாரல்= மலைப்பக்கம். அலைய= தாவரங்கள் தலையசைய. அருவிகுதிபாயும்= அருவி குதித்துப் பாயும். மலைய மலையார்= பொதிகைமலைக்குரியவர். மனை= வீடு. அரும்பு மூரல்= முல்லை அரும்பு போன்ற பற்கள். முருக்கினர்= முருக்கம்பூப்போன்ற செவ்விதழுடையவர். சேரலரை= தன்னைக்கூடிப் புலந்த கணவரை. கூழையில் சூழ்= தமது நீண்டகூந்தலால் கட்டுவதும். மொய்ம்பினர்= வலிய வீரர்கள். சேரலரை= பகைவரை. கூழையில் சூழ்= தம்படை வகுப்பினால் சூழ்ந்துகொண்டு வெல்லும்.

**பொழிப்புரை** : மலைப்பக்கத்துத் தாவரங்கள் தலையசைக்க மலைவீழ் அருவி குதித்துப் பாயும் பொதிகை மலைக்குரியவர் வீடு; முல்லையரும்பு போன்ற பற்களும் முருக்கம்பூப் போன்று சிவந்த இதழினரும் ஆகிய மனைவிமார் புலந்த தம்கணவரை நீண்ட தம்கூந்தலால் கட்டுவதும், வலிமையுடைய போர் வீரர்கள் பகைவரைத்தம் படைவகுப்பால் - அணிவகுப்பால் சூழ்ந்து வெல்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : அரும்பு மூரல் என்றதால் இளமை குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : சேரலரைக் கூழையில் சூழ் - செம்மொழிச்சிலேடை.

58. நாற்றமலர்க் கேணிகளும் நாகிளஞ்சூல் ஞெண்டினமும்
சேற்ற வளைஆர்க்கும் சிங்கையே - போற்றுகிற
போரகவ சத்தினார் போர்ம தகரித்தோல்
வீரகவ சத்தினான் வீடு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : போற்றுகின்ற போர் அக வசத்தினார், போர்மதகரித் தோல் வீர கவசத்தினான் வீடு; நாற்ற மலர்க்கேணிகளும் சேற்ற வளை ஆர்க்கும் சிங்கை.; நாகு இளம் சூல் ஞெண்டினம் சேற்ற வளை ஆர்க்கும் சிங்கை.

**குறிப்புரை** : போற்றுகிற போர் அக வசத்தினான்= பெரும்போரில் தன்வசமானவன் - தானே வெல்கிறவன். மதகரித்தோல்= மதமிக்க யானைத்தோல். போர் கவசத்தினான் வீடு= கவசமாகப் போர்த்தியவன் **இருப்பிடம்.** நாற்ற மலர்க் கேணிகள்= மணக்கும் மலர்கள் பூத்த அகழிகள். சேற்ற வளை ஆர்க்கும்= சேற்றில்வாழும்சங்குகள் முழங்கும். நாகுஇளஞ்சூல்ஞெண்டினம்= இளையதாய் இளஞ்சூல் கொண்ட ஞெண்டின் கூட்டம். சேற்ற வளை ஆர்க்கும்= சேற்றிலுள்ள வளைகளில். நிறைந்திருக்கும்.

**பொழிப்புரை** : பெரும்போரில் தன்வசமானவனும் - தானே வெல்கிறவனும், மதம்மிக்க யானைத் தோலைக் கவசமாகப் போர்த்தியவனும் ஆகிய சிவபிரானின் வீடு; மணக்கும் மலர்களுடைய அகழியின் சேற்றில் சங்குகள் முழங்குவதும், இளைமையுடன் இளஞ்சூல்கொண்டவையுமான ஞெண்டின் கூட்டம் சேற்றில் உள்ள வளைகளில் நிறைந்திருப்பதும் ஆகிய சிங்கையாகும்..

**இலக்கணக்குறிப்பு** : சேற்ற வளை ஆர்க்கும் - செம்மொழிச்சிலேடை.

59. ஊறு கரிமதமும் ஒண்தொடியார் கண்மலரும்
சேறுவள மால்கமிடும் சிங்கையே = நீறுபுனை
வார்கரக பாலனார் வாழ்த்துமண வாளர்பலி
தேர்கரக பாலனார் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நீறு புனைவார் கரக பாலனார் வாழ்த்து மணவாளர், பலிதேர்கர கபாலனார் பற்று; ஊறுகரிமதமும் சேறுவளம் மால் கமிடும் சிங்கை, ஒண்தொடியார் கண்மலரும் சேறு வளமால் கமிடும் சிங்கை.

**குறிப்புரை** : நீறுபுனைவார்= திருநீறு தரித்த அகத்தியர். கரக பாலனார்= கமண்டலத்திற்கு உரியஅகத்தியர். மணம் ஆளர்= நன்னிலைகளை ஆள்கிறவர் - சிவபிரான். பலிதேர் கர கபாலனார்= பிச்சை ஏற்கக் கையில் கபாலம் ஏந்தியவர். ஊறுகரிமதம்= சுரக்கின்ற யானைமதம். சேறுவளம்= சேற்றின் வளத்தை. மால் கமிடும்= பெரிதும் தாங்கும். ஒண்தொடியார் கண்மலர்= ஒளிபொருந்திய மகளிரின் கண்களாகிய மலர்கள். சேறு= திருவிழா. வள மால் கமிடும்= பொலிவை மிகவும் தாங்கியிருக்கும். ( திருவிழாப் பொலிவின் மகிழ்ச்சியைக் கண்கள் பெற்றிருக்கும் )

**பொழிப்புரை** : திருநீறு தரித்தவரும், கையில் ஏந்திய கமண்டலத்திற்கு உரியவரும் ஆகிய அகத்தியரால் போற்றப்பெறுகிற அனைவரின் நன்னிலையை ஆள்கிறவரும், பிச்சை ஏற்கக் கையில் கபாலத்தினை - மண்டைஓட்டினை ஏந்தியவருமாகிய சிவபிரான் சேர்ந்துள்ள இடம்; யானையிடம்

ஊறும் மதநீர் சேற்றின் வளத்தைப் பெரிதும் தாங்குவதும் - காப்பதும், ஒளிபொருந்திய வளையலணிந்த மகளிரின் கண்மலர்கள் திருவிழாவின் பொலிவைத் தாங்கியிருப்பதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : யானைமதம் மூன்றென்பர். அவை கன்னமதம்,கபோதமதம்( கபோதம்=மூக்கு - துதிக்கை) பீசமதம் ( பீசம்= ஆண்குறி ) என்பன. பலிதேர் கர கபாலனார்= பிட்சாடனர்.

**இலக்கணக்குறிப்பு** : சேறுவள மால்கமிடும் - செம்மொழிச்சிலேடை.

60. மையார் கரும்புயலை வாழ்வாரைக் கண்டுவப்பால்
செய்யார் அளகமிகும் சிங்கையே - கையால்
கடனஞ் சமைத்தவன் கழல்காலால் மன்றில்
நடனம் சமைத்தான் ஊர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : கையால் கடன் அஞ்சு அமைத்தவன், கழல்காலால் நடனம் சமைத்தான் ஊர்; மை ஆர் கரும்புயலை செய்யார் அளகம் மிகும் சிங்கை; வாழ்வாரைக்கண்டு உவப்பால் செய்யார் அள் அகம் மிகும் சிங்கை.

**குறிப்புரை** : கையால்= நினைப்பதன்மூலமாகவே ( கை= நினைவு ). கடன் அஞ்சு அமைத்தவன்= கடமைகள் ஐந்தையும் ( படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ) ஆக்கியவன். நடனம் சமைத்தான்= கூத்தாடியவன். மைஆர் கரும்புயலை= கருமை பொருந்திய கார் மேகத்தை. செய்யார் அளகம் மிகும்= திருமகளை ஒத்தவர் கூந்தல் வெல்லும். செய்யார் அள் அகம் மிகும்= நன்மனத்தாரின் நெருங்கிய உள்ளம் பூரிக்கும்.

**பொழிப்புரை** : நினைப்பளவிலேயே கடமைகளாகிய ஐந்தொழிலை ஆக்கியவனும், வீரக்கழல் அணிந்த திருவடிகளால் பொன்னம்பலத்தில் கூத்தாடுகிறவனும் ஆகிய சிவபிரான் ஊர்; கருமைபொருந்திய கார்மேகத்தைத் திருமகள் போன்றமகளிர் கூந்தல் வெல்வதும், நன்றாகவாழ்கிறவரைப் பார்த்து நன்மனத்தரின் நெருங்கிய உள்ளம் பூரிப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : ஐந்தொழில்களுள் மறைத்தலை அழித்தலிலும், அருளலைக் காத்தலிலும் அடக்கிப் படைத்தல் காத்தல் அழித்தல் என்று முத்தொழில் கூறுவதும் உண்டு.

நம்மூளை நினைப்பதை நம்கை செய்வதுபோல் அப்பன் நினைப்பதை அம்மை செய்து முடிப்பாள். எனவே ஐந்தொழிலையும் தன் நினைப்பளவில் முடிப்பவன் அப்பன் என்றார். இதனை;

" நம்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும் " ( திருக்களிற்றுப்படியார். 78 )

என்று உவமைகாட்டிக்கூறும். ( நாடு அனைத்தும்= நினைக்கும் அனைத்துச்செயலையும் )

**இலக்கணக்குறிப்பு** : செய்யார் அளகமிகும் - பிரிமொழிச்சிலேடை.

61. பேரா தரநெறியில் பெய்யுநறைப் பூங்காவில்
தேரா தவருமுறும் சிங்கையே - சோராது
பூவாரப் பாட்டினார் பொன்நா டளிக்கவைத்த
தேவாரப் பாட்டினார் ஊர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : சோராது பூஆரம் பாட்டினார் பொன்நாடு அளிக்கவைத்த தேவாரப்பாட்டினார் ஊர்; பேராது அறநெறியில் தேர் ஆதவரும் உறும் சிங்கை; பெய்யுநறைப் பூங்காவில் தேர் ஆதவரும் உறும் சிங்கை.

**குறிப்புரை** : சோராது= இடைவிடாது. பூஆரம்= மலர்மாலை. பாட்டினார்= பாடுவோர்.. பொன்நாடு= தேவருலகம். அளிக்க வைத்த= தரும்பொருட்டு அருளிய. தேவாரப்பாட்டினார்= தேவாரத்திருமுறைகளுக்கு உரியவர். அறநெறியில் பேராது = அறநெறியில் விலகாது தேர் ஆதவர்= அறநெறி குலையாது அதை ஆராயும் தவத்தோர், தேர் ஆதவர்= ( மந்திரம் ) சொல்லும் பார்ப்பனர்.

**பொழிப்புரை** : இடைவிடாது மலர்மாலை சூட்டியவர், பாடல்பாடியவர் ஆகியவர்களுக்குத் தேவருலகம்தரும் தேவாரப்பாடலுடையவர் ஊர்; அறநெறி குலையாது அதை ஆராயும் தவத்தோரும், தேன்பொழியும் பூஞ்சோலைகளில் ( மந்திரம் ) சொல்லும் பார்ப்பனரும் மிகுதியாக உள்ள சிங்கையாகும்

**இலக்கணக்குறிப்பு** : தேராதவரும் - செம்மொழிச்சிலேடை.

62. ஆரத் தடம்பொருநை ஆறும்அடல் காளையரும்
தீரத் தனம்பெயராச் சிங்கையே - வாரத்து
நீளத் தருவான் நிழல்வாழ்(வு) அடியார்க்(கு)
ஆளத் தருவான் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூடுமுறை** : வாரத்து நிழல்வாழ்வு நீளத்தருவான்; அடியார்க்கு ஆளத்தருவான் அகம்; ஆரத் தடம்பொருநை ஆறு தீ ரத்னம் பெயராச்சிங்கை; அடல் காளையர் தீரத்தனம் பெயராச் சிங்கை.

**குறிப்புரை** : வாரத்து= அன்பினால். நிழல்வாழ்வு நீளத்தருவான்= கற்பகமரநிழல் வாழ்வை - தேவருலக வாழ்வை. மிகுதியாகத் தருவான். அடியார்க்கு ஆளத்தருவான் அகம்= அடியவர்க்கு அவ்வாழ்வை ஆளும்சிறப்பை - இந்திரபதவியை அருள்கிறவன் இருப்பிடம்; ஆரத் தடம்பொருநை ஆறு, தீ ரத்னம் பெயராச் சிங்கை= சந்தனமரங்களுடன் வரும் அகலமான பொருநையாறு தீப்போல் ஒளிரும் மாணிக்கங்களைப் புரட்டிக்கொண்டு வரும் சிங்கை; அடல் காளையர்= வெற்றிபொருந்திய வீரர்கள். தீரத்தனம் பெயராச் சிங்கை= தீரச்செயல்களில் குன்றாத சிங்கை.

**பொழிப்புரை** : அன்பினால் கற்பகமர நிழல்வாழ்வை - தேவருலக வாழ்வை மிகுதியாகத் தருபவனும், அடியவர்க்கு அவ்வுலகை ஆளும் இந்திரபதவி தருபவனும் ஆகிய சிவபிரான் வாழிடம்; சந்தனமரங்களுடன் வரும் அகலமான பொருநையாறு, தீப்போல் ஒளிரும் இரத்தினங்களைப் புரட்டிக் கொண்டு வருவதும்; வெற்றிபொருந்திய வீரர்கள் தீரச்செயல்களில் குன்றாததும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீ ரத்னம் பெயரா - பெயரா - செய்துஎன்னும் வாய்பாட்டு வினையெச்சம். தீரத்தனம் பெயரா - பெயரா - ஈறுகெட்டஎதிர்மறைப் பெயரெச்சம். தீரத்னம் பெயரா - பிரிமொழிச்சிலேடை.

63. ஊறல் மதநீர் உவாக்களிறும் ஒண்சுரும்பும்
தேறலவாய்க் கொண்டுலவும் சிங்கையே - நாறும்
நவத்துவா ரத்தினான் நண்ணும் உடம்பெண்ணார்
தவத்துவா ரத்தினான் சார்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை :** நாறும் நவத்துவாரத்தினால் நண்ணும் உடம்பு எண்ணார் தவத்து வாரத்தினான் சார்பு; மதநீர் ஊறல் உவாக்களிறு தேறலவாய் கொண்டு உலவும் சிங்கை; ஒண்சுரும்பும் தேறல் அவாய்க்கொண்டு உலவும் சிங்கை.

**குறிப்புரை :** நவத்துவாரம்= ஒன்பான்துளைகள். ( துளைகள் கண் காது மூக்கு ஆகியன இரண்டிரண்டு, வாய் மலவாய் சிறுநீர்வாய் ஒவ்வொன்று ஆக ஒன்பது. இவை கட்புலனாவன. கட்புலனாகா வியர்வைத் துளைகள் எத்தனை எத்தனையோ ) நண்ணும்= பெறும். உடம்பு எண்ணார்=உடம்புபற்றி நினையாதவர் - பிறப்பில்லார். தவத்து வாரத்தினான்= தவத்தால் விளையும் அன்புவடிவன் - சிவபிரான். மதநீர் ஊறல்= மதநீர் ஊறும். உவாக்களிறு= வாலிபவயதுடைய ஆண்யானை. தேறலவாய்= மதம் தெளியாதனவாய். கொண்டு உலவும்= மதம்கொண்டு உலவும். ஒண் சுரும்பு= ஒளிரும் வண்டுகள். தேறல் அவாய்க்கொண்டு= தேனினை விரும்பி. உலவும்= திரியும்.

**பொழிப்புரை :** நாறுகிற ஒன்பான் துளைகள் பொருந்திய உடம்பு எடுக்காதவராய், தவத்தினால் அமைந்த அன்பு வடிவான சிவபிரான் சார்ந்துள்ள இடம்; மதநீர் ஊறும் வாலிபவயதுடைய ஆண்யானைகள் மதநீர் தெளியாவாய் உலவுவதும்; ஒளிபொருந்தியவண்டுகள் தேனினை விரும்பித்திரிவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு :** நவத்துவாரம் - தொகைக்குறிப்பு. தேறலவாய் - பிரிமொழிச்சிலேடை.

64. அங்கம் பசுந்தளிரன் னார்நுதலும் ஆடவரும்
சிங்கம் புலிபொருதென் சிங்கையே - மங்கை
சுறவுக் குழையார் துணைவிழிதந்(து) ஓடாக்(கு)
உறவுக் குழையார் குடி,

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை :** சுறவுக் குழையார் மங்கை, துணைவிழிதந்து ஓடுஆக்கு உறவு குழையார் குடி; அங்கம் பசுந்தளிர் அன்னார் நுதல் சிங்கு அம்புலி பொரு சிங்கை; ஆடவரும் சிங்கம்புலி பொருதென் சிங்கை.

**குறிப்புரை :** சுரவுக்குழையார் மங்கை= சுராமீன் ஒத்த காதணியணிந்த தாருகவனத்து முனிவர்களின் மனைவிமார். விழிதந்து= பார்த்து. ஓடாக்கு உறவுக் குழையார்= ( உள்ளம் ) மெலியச் செய்யும் காமவிகாரத்தில் மனம்வருந்தாதவர். அங்கம் பசுந்தளிர் அன்னார்= உடல் உறுப்புகள் வளமான தளிர்போன்றமகளிரின். நுதல் சிங்கு அம்புலி பொரு= நெற்றி, தேய்ந்த நிலாவை - பிறையை ஒத்ததும்; ஆடவர்= ஆண்மக்கள். சிங்கம் புலி பொரு= சிங்கத்தையும் புலியையும் ஒத்துவிளங்கும்.

**பொழிப்புரை :** சுறாவடிவக் குழையணிந்த அம்மையை உடையவரும், தாருகவனத்து முனிவர் மனைவியரது இருவிழிப்பார்வையால் உள்ளத்தை மெலியச்செய்யும் காமவிகாரப்படாதவரும் ஆகிய சிவபிரான் குடியிருப்பது; வளமான தளிர்போன்ற உறுப்புகளுடைய மகளிரின் நெற்றி, தேய்ந்த நிலவு - பிறை போன்று விளங்குவதும், ஆண்மக்கள் சிங்கம் புலியை ஒத்து விளங்குவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம் :** சிவபிரானை அம்மையப்பன் என்றாலும் காமவிகாரப்படாதவன். அவன், :

" பவன்பிரம சாரி யாகும் பால்மொழி கன்னியாகும்
தவந்தரு ஞானத் தோர்க்குஇத் தன்மைதான் தெரியு மன்றே." ( சித்தியார். சுபக். 77 )

" மங்கையோடு இருந்தே யோகுசெய் வானை " ( திருவிசைப்பா..கங்கைகொண்ட. 11 ) என்பன சாத்திரமும் திருமுறையுமாகும்

**இலக்கணக்குறிப்பு :** சிங்கம் புலிபொரு - பிரிமொழிச்சிலேடை.

65. தப்பாத தெய்வமறைச் சைவரும்மின் னார்தனமும்
செப்பாக மங்களம்கூர் சிங்கையே - கப்பான
சூலம்க ரந்திரித்தார் சூழ்ந்துதக்கன் வேள்விதொக்கார்
சீலம்க ரந்(து)இரித்தார் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : கப்புஆனசூலம் கரம்திரித்தார், சூழ்ந்து தக்கன் வேள்வி தொக்கார் சீலம் கரந்து இரித்தார் சேர்வு; தப்பாத தெய்வமறைச் சைவரும் செப்பு ஆகமங்கள் அம் கூர் சிங்கை. மின்னார் தனமும் செப்புஆக மங்களம் கூர் சிங்கை.

**குறிப்புரை** : கப்புஆன சூலம்= பிளவுபட்டதான முத்தலைச் சூலம். கரம்திரித்தர்= கையில் ஏந்திச் சுழற்றியவர். சூழ்ந்து தக்கன் வேள்வி தொக்கார்= ஆராய்ந்து தக்கனின் வேள்வ்செய்யக் கூடியவர்கள். சீலம் கரந்து= வேள்விசெய்யும் ஒழுக்கம்மறைந்து. இரித்தார்= ஓடச்செய்தவர். தப்பாத தெய்வமறைச் சைவர்= பலன்தருவதில் தவறாத தெய்வத்தன்மைவாய்ந்த திருமுறைகளாகிய மறைஓதும் சைவர். செப்பு ஆகமங்கள் அம் கூர் சிங்கை= சொல்லும் ஆகமங்களின் அழகு மிகும் சிங்கை; மின்னார் தனமும்= மின்னல்ஒத்த மகளிர் முலைகள். செப்புஆக மங்களம் கூர்சிங்கை= சிமிழாக விளங்கி மங்களம் மிகும்சிங்கை

**பொழிப்புரை** : முத்தலையாகப் பிளவுபட்ட சூலத்தைக் கையில் ஏந்திச் சுழற்றியவரும், ஆராய்ந்து தக்கனின் வேள்விசெய்யக் கூடியவர்கள், வேள்விசெய்வதைக் கைவிட்டு மறைந்து ஓடச்செய்தசிவபிரான் சேர்ந்தஇடம்; பலன்தருவதில் தவறாத தெய்வத்தன்மைவாய்ந்த திருமுறையாம் மறைஓதும் ஆதிசைவர்கள் சொல்லும் ஆகமங்களின் அழகு மிகுமிடமும், மின்னல்ஓத்த மகளிரின் முலைகள் சிமிழாகவிளங்கி மங்களம் மிகுவதும் ஆகிய சிங்கையாகும்.

**விள்க்க்ம்** : திருமுறைகள், இறந்தவரை எழுப்பித்தரல் போன்ற அருஞ்செயல் செய்தவை. வடமொழி நான்மறைகள், இத்தகு செயல் செய்தில. மாறாக மாரண மந்திரகள் - சாகடிக்கும்மந்திரங்கள் உடையன என்பர் அறிஞர்கள்

**விளக்கம்** : தக்கன் வேள்வியில் கூடியவர்கள் ஓடியது ;

" சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி உந்தீபற
உருத்திர நாதனுக்கு உந்தீபற. " ( திருவாசகம். 299 )

**இலக்கணக் குறிப்பு** : செப்பாக மங்களம் கூர் - பிரிமொழிச்சிலேடை.

66. பத்தித் துணர்ச்சோலைப் பைங்கனியும் மென்சுரும்பும்
தித்தித் துவைப்பார்க்கும் சிங்கையே - சத்திக்கு
வாமம் கொடுக்கின்றார் வன்சமனை ஓர்மகவாத்
தாமம் கொடுக்கின்றார் சார்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : சத்திக்கு வாமம் கொடுக்கின்றார், வன்சமனை ஓர்மகவாத் தாமம் கொடுக்கின்றார் சார்பு; பத்தித் துணச்சோலைப் பைங்கனி தித்தித்து வைப்பு ஆர்க்கும் சிங்கை; மென்சுரும்பும் தித்தி துவைப்பார்க்கும் சிங்கை.

**குறிப்புரை** : வாமம்= இடது பாகம். வன்சமனை = கொடியகாலனுக்கு. ஓர்மகவா= ஒருமகனாக. தாமம் கொடுத்தார்= உடம்பு கொடுக்கின்றவர். துணர் பத்தி சோலை= பூங்கொத்துகளுடன் வரிசையாக உள்ள சோலை. பைங்கனி= வளமான பழம். தித்தித்து வைப்பு ஆர்க்கும்= இனித்துப் பெருமை சேர்க்கும்.

சுரும்பும் தித்தி துவைப்பு மென்ஆர்க்கும்= வண்டுகள் இசைக்கருவியாக மென்மையாக முரன்று ஆரவாரிக்கும்.

**பொழிப்புரை** : அம்மைக்குத் தன்இடது பாகம் கொடுக்கின்றவர், கொடிய காலனைத் தன்ஒரு மகனாகக் கருதி உடம்பு கொடுக்கிறவரும் ஆகிய சிவபிரான் சார்ந்துள்ள ஊர்; பூங்கொத்துகளுடன் வரிசையாக உள்ள சோலையில் கனிகள் இனித்துப் பெருமை சேர்ப்பதும், வண்டுகள் இசைகருவியாக மென்மையாக முரன்று ஆரவாரிப்பதும் சிங்கையாகும்.

. **இலக்கணக்குறிப்பு** : தித்தித் துவைப்பார்க்கும் - பிரிமொழிச்சிலேடை.

67. காரளக மாதருமென் காண மயில்நடமும்
சீரளவி னாடகம்சேர் சிங்கையே - நீரளவு
கோடீச்ச ரத்தார் குரைகழல்கால் தஞ்சர்கொடுங்
கோடீச் சரத்தார் குடி.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நீர்அளவு கோடீச்சரத்தார், குரைகழல்கால் தஞ்சர் கொடும் கோடீச்சத்தார் குடி, கார்அளக மாதரும் சீரளவு இன் ஆடு அகம்சேர் சிங்கை; காணமயில் நடமும் சீரளவு இன் நாடகம் சேர் சிங்கை.

**குறிப்புரை** : நீர் அளவு= கங்கைநீர் கலந்த. கோடீச்சரத்தார்= சடைமுடியுடையவர். குரைகழல்கால் தஞ்சர்= ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியைப் பிறர் அடைக்கலம் புகுமிடமாகக் கொண்டவர். கொடுங் கோடீச்சரத்தார்= வளைந்த சடைமுடியினர். கார் அளகமாதர்= கார்மேகம்போல் கருமையான கூந்தலுடிய மகளிர். சீர் அளவு இன் ஆடுஅகம் சேர் சிங்கை= சிறப்புப்பொருந்திய இனிய கூத்தாடும் இடம் அடையும் சிங்கை. மயில்நடமும் காண= மயிலின் நடனத்தைக் காணின். சீர் அளவு இன் நாடகம்சேர் சிங்கை= சிறப்புப்பொருந்திய இனிய நாடகமாக விளங்கும் சிங்கை.

**பொழிப்புரை** : கங்கைநீர்கலந்த சடையுடையவரும், தனது ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியைப் பிறர் அடைக்கலம் புகுமிடமாகக் கொண்டவரும், வளைந்த சடைமுடி உடையவருமகிய சிவபிரான் குடியிருப்பது; கார்மேகம் ஒத்த கூந்தலுடைய மகளிர், சிறப்பப்பொருந்திய இனிய கூத்தாடும் இடத்தில் சேர்வதும்; மயிலின் நடனத்தைக்காணில்,சிறப்புப்பொருந்திய நடனமாக விளங்குவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : குரைகழல் - வினைத்தொகை. சீரளவி னாடகம்சேர் - பிரிமொழிச்சிலேடை.

68 : ஆக்கமுறு விண்ணவரும் அஞ்சிறைச்செஞ் சூட்டனமும்
தேக்கமல மென்றிருக்கும் சிங்கையே - நோக்க
மதியா தவனழலான் வாழ்த்தினரைத் தாழ்த்த
மதியா தவனழலான் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நோக்கம் மதியாதவன் அழலான், வாழ்த்தினரைத் தாழ்த்த மதியாதவன் அழலான் வாழ்வு; ஆக்கம் உறு விண்ணவர் தேக்கு அமலம் என்று இருக்கும் சிங்கை; அம்சிறைச் சூட்டு அனமும். தே கமலம் என்று இருக்கும் சிங்கை.

**குறிப்புரை** : நோக்கம் மதியாதவன்= யோகத்தில் இருக்கும் தன் நோக்கத்தை மதிக்காத மன்மதன். அழலான்= தீக்கிரையாக்கியவன். மதியாதவன் அழலான்= நினைக்காதவனாகிய எருக்குச்சூடியவன். ஆக்கம் உறும்= உயர்வுடைய. விண்ணவர் தேக்கு அமலம் என்று இருக்கும் சிங்கை= தேவர்கள் மலமின்மையை ஒருசேரத் தேக்கிய இடம் என்று இருப்பது சிங்கை. அம்சிறைச் சூட்டு அனம்=ஆழகிய சிறகு, கொண்டை

ஆகியன உடைய அன்னப்பறவை. தேக் கமலம் என்று இருக்கும் சிங்கை= தேன்பொருந்திய தாமரைஎன்று தங்கிஇருக்கும் சிங்கை.

**பொழிப்புரை** : யோகத்தில் இருக்கும் தன்நோக்கத்தை மதிக்காத மன்மதனைத் தீக்கிரையாக ஆக்கியவனும், தன்னை வாழ்த்தியவர்களைத் தாழ்த்த நினைக்காதவனும் ஆகிய எருக்குச்சூடிய சிவபிரான் வாழிடம்; உயர்வுடைய விண்ணவர் இவ்வூர் மலமின்மையை ஒருசேரத் தேக்கிய இடம்என்று இருப்பதும்; அழகிய சிறகும் கொண்டையும்கொண்ட அன்னப்பறவை இவ்வூரைத் தேன்பொருந்திய தாமரைகளுடையது என்று இங்கு வாழ்வதும் சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தேக்கமலம் - பிரிமொழிச்சிலேடை.

69. பாரக் குழலார் பயோதரமும் பைங்கூழும்
சேரப் பணைத்துவளர் சிங்கையே - வாரத்து
நச்சரவ மானார் நரகே சரிநடுங்க
அச்சரப மானார் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : வாரத்து நச்சு அரவம் ஆனார், நரகேசரி நடுங்க அ சரபம் ஆனார் அகம்; பாரக் குழலார் பயோதரமும் சேரப் பணைத்து வளர்சிங்கை; பைங்கூழும் சேரப் பணைத்துவளர் சிங்கை.

**குறிப்புரை** : வாரத்து= ( கழறிற்றறிவாரின் ) அன்பினால். நச்சு= ( அவர் ) விரும்பும். அரவம்ஆனார்= சிலம்பொலி ஆனவர். நரகேசரி= நரசிங்கம். நடுங்க= அஞ்சிநடுங்க. அ சரபம் ஆனார்= அழகியசரபம்என்னும் பறவையானவர். பாரக்குழலார்= செறிந்த கூந்தலுடைய மகளிர். பயோதரம்= வயிறு. சேர= கணவனைக்கூட பணைத்து வளர்= ( கருவுற்றதால் )செழித்துவளரும். பைங்கூழ்= பசியபயிர். சேர= ஒருசேர. பணைத்துவளர்= செழித்து வளரும்.

**பொழிப்புரை** : கழறிற்றறிவாரின் அன்பு காரணமாக அவர் விரும்பும் சிலம்பொலியானவரும், நரசிங்கம் அஞ்சிநடுங்க அச்சரபப்பறவையானவரும் ஆகிய சிவபிரான் வாழிடம்; செறிந்த கூந்தலுடைய மகளிர் தம் கணவனைக்கூட, அதனால் அவர்களின் வயிறு செழித்துவளர்வதும், பசியபயிர்கள் ஒருசேரச் செழித்து வளர்வதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : கழறிற்றறிவாரின் பூசனையைத் தான் ஏற்றமையைச் சிவபிரான் தன் சிலம்பொலி மூலம் கழறிற்றறிவார்க்கு அறிவித்தல் ;

" வாசத்திருமஞ் சனம்பள்ளித் தாமம்சாந்தம் மணித்தூபம்
தேசில்பெருகும் செழுந்தீபம் முதலா யினவும் திருவமுதும்
ஈசற்கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்
**பூசைக்குஅமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலிஅளித்தார்."** ( பெரியபு. 3776 )

சரபத்தை, எண்கால் புள் என்பர்.

**70.** நேசத் தினின்மடமை நீங்கலின்நல் லோர்எவர்க்கும்
தேசத் தினைநிகர்க்கும் சிங்கையே - நீசப்
புலைச்சமய மாற்றினார் பொய்யறிவுக்(கு) எட்டா
துலைச்சமய மாற்றினார் ஊர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை :** நீசப் புலைச்சமயம் மாற்றினார், பொய்அறிவுக்கு எட்டா துலைச் சமயம் ஆற்றினார் ஊர்; நேசத்தில் நில் மடமை தேசத்தினை நிகர்க்கும் சிங்கை; நீங்கல்இல் நல்லோர் எவர்க்கும் தேசத்தினை நிகர்க்கும் சிங்கை.

**குறிப்புரை :** நீசப் புலைச்சமயம் மாற்றினார்= கொடுமையான புன்குணமுடைய. சமயம் மாற்றினார்= சமயத்தை அழித்தவர். பொய்அறிவுக்கு எட்டா= பொய்யான அறிவு உடையவர்களுக்கு எட்டாத. துலைச் சமயம் ஆற்றினார்= துலைக்கோல் - தராசுமூலம் - தீர்ப்பு வழங்கியசிவபிரான். நேசத்தில் நில்= அன்பில் உள்ள. மடமை - அறியாமை. தேசத்தினை நிகர்க்கும்= அவ்வன்பின் உறைப்பை - வலிமையை ஒத்ததாகும், ( தேசம்= உறைப்பு ) நீங்கல் இல் நல்லோர் எவர்க்கும்= சிங்கையை நீங்காத நல்லவர் எவர்க்கும். தேசத்தினை நிகர்க்கும்= அது சொந்த நாட்டினை ஒக்கும்.

**பொழிப்புரை :** கொடிய புன்குணமுடைய சமயத்தை - சமணத்தை. ( திருஞான சம்பந்தர்மூலம் ) அழித்தவரும், பொய்யான அறிவுக்கு எட்டாத ( அமர்நீதி நாயனாரின் பத்திமைச் சிறப்பை ) தராசின்மூலம் காட்டித் தீர்ப்பு வழங்கியவரும் ஆகியசிவபிரான் ஊர்; அன்புச்செயலில் உள்ள அறியாமை, அவ்வன்பின் உறைப்பை - வலிமையை ஒத்ததும், சிங்கையை விட்டு நீங்காத நல்லவர் எவர்க்கும் சொந்த நாட்டினை ஒத்ததும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம் :** மீதூரும் அன்பு மடம்படும். எடுத்துக்காட்டு பாரி பேகன் செயல்கள் :

“ முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும் - சொல்லின்
நெறிமடல்பூந் தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
அறிமடமும் சான்றோர்க்கு அணி ” ( பழமொழிநானூறு )

“ கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே “( புறம் 142 )

“ பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும்பு ஏத்தப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி “ ( புறம் 200 )

“ ஊருடன் இரவலர்க்கு அருளித் தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்
படுமணியானைப் பறம்பிற்கோமான்
நெடுமாப் பாரி “ ( புறம் 201 )

அமர்நீதி நாயனார் அளவில்லாத பொருளைவைத்து, மனைவி, மகன், தானென்று அனைவரும் துலையில் ஏற அடியவர் கோவணத்துக்கு நேர்ஆகித் துலை சமமானது.

“ அண்டர் தம்பிரான் திருஅரைக் கோவணம் அதுவும்
கொண்ட அன்பினில் குறைபடா அடியவர் அடிமைத்
தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர் நின்றதுஅத் துலைதான் “ ( பெரியபு. 545 )

**இலக்கணக்குறிப்பு :** தேசத்தினை நிகர்க்கும் - செம்மொழிச்சிலேடை.

71. வெவ்வலரிக்(கு) எத்துறையும் மென்தூ லியர்நாவும்
செவ்வலரிப் பூமணக்கும் சிங்கையே - மௌவலரும்(பு)
ஆக முறுவலித்தார் ஆம்பல்இத ழாளைவிட்டு
யோக முறுலார் ஊர்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை :** மௌவல் அரும்பாக முறுவலித்தார், ஆம்பல் இதழாளை விட்டு யோகம் உறு வல்லார் ஊர்; வெவ் அலரிக்கு எத்துறையும் செவ் அலரிப்பூ மணக்கும் சிங்கை; மென்சூலியர் நாவும் செவ்வலரிப்பூ மணக்கும் சிங்கை

.

**குறிப்புரை :** மௌவல் அரும்பாக= மல்லிகை அரும்புஆகிய பற்கள். முறுவலித்தார்= புன்முறுவல் செய்தவர். ஆம்பல் இதழாளை விட்டு= செங்குவளைமலர் போன்ற உதடுகளையுடைய பார்வதிதேவியை ஒதுக்கி.விட்டு. யோகம் உறு வலார்= யோகநிலையில் முனைந்துஇருந்த வல்லவராகிய சிவபிரான். செவ்வலரிக்கு= வெப்பத்தால் சிவந்த சூரியனுக்கு. எத்துறையும்= எல்லா நீர்த்துறைகளிலும். செவ் அலரிப்பூ மணக்கும்= செந்தாமரைமலர் மலர்ந்து மணம்பரப்பும் சிங்கை. மென்சூலியர்= நுட்பமான கருக்கொண்ட மகளிர். நா செவ்வலரிப்பூ மணக்கும்= நாக்கு செந்தாமரைமலர் போல்சிவந்து விளங்கும் சிங்கை.

**பொழிப்புரை :** முப்புரங்களையும் எரிக்க, மல்லிகைஅரும்புகளாக விளங்கும்பற்கள் சிறிதுஅளவு தோன்றப்புன்முறுவல் பூத்தவரும், செங்குவளை மலர்போன்ற இதழ்களையுடைய பார்வதிதேவியை ஒதுக்கிவிட்டுத் தான்மட்டும் யோகநிலையில் மிக்கிருந்தவரும் ஆகிய சிவபிரான் ஊர்; வெப்பத்தால் சிவந்த சூரியன்வர எல்லாநீர்த்துறைகளிலும் செந்தாமரை மலர்கள் மலர்ந்து மணம்பரப்புவதும்; நுட்பமான கருத்தரித்த மகளிரின் நாக்கு செந்தாமரை போல் பொலிவுடன் விளங்குவதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்:** சிவபிரான் முறுவலித்தது முப்புரஎரிக்காக. தனித்து யோகில்அமர்ந்தது தேவர்கள் ஏவ, காமமூட்ட மன்மதன் வில்வளைத்த போது.

**இலக்கணக்குறிப்பு :** செவ்வலரிப்பூ மணக்கும் : செம்மொழிச் சிலேடை.

72.

ஆகுலவா ரம்குறித்த ஆயர் குலவணிகர்
சேகுலவா ரம்பிரிக்கும் சிங்கையே - கோகுலமுன்
ஐவசனத் தோகையினார் ஞானவடி வின்புடையார்
சைவசனத் தோகையினார் சார்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை :** கோகுலமுன் ஐ வசனத்து ஓகையினார், ஞானவடிவு இன்புடையர் சைவ சனத்து ஓகையினார் சார்பு.; ஆ குல வாரம் குறித்த ஆயர் சேகுல வாரம் பிரிக்கும் சிங்கை; குலவணிகர் சேகு உலவார் அம் பிரிக்கும் சிங்கை.

**குறிப்புரை :** குலமுன்= உயிர்க்குலமுன்னே. ஐ வசனத்து ஓகையார்= அழகுறப்பேசி மகிழ்பவர். ஞாவவடிவு இன்புடையார்= ஞானவடிவமாகிய பேரின்பவடிவினர். சைவசனத்து ஓகையினார் சார்பு= சைவமக்களால் மகிழ்கிறவர் சார்ந்தது; ஆ குல வாரம் குறித்த ஆயர்= பசுக்கூட்டத்தின்மேல் அன்புடைய ஆயர். சேகுல வாரம் பிரிக்கும்= காளைக்கூட்டத்தை அன்புடன் பிரித்து வைப்பதும், குல வணிகர்= சிறந்த வணிகர் குலத்தினர். சேகு உலவார் அம் பிரிக்கும்= காழ்ப்புடன் உலவமாட்டார் - வாழாராய். அம் பிரிக்கும் = அழகுற அதனை - காழ்ப்பை - தம் வாழ்வில் பிரித்துவைக்கும் ( காழ்ப்புக் கொள்ளார் ).

**பொழிப்புரை :** உயிர்க்கூட்டத்தின்முன் அழகுறப்பேசி மகிழ்பவரும், ஞானமேதனது வடிவமாகிய பேரின்பவடிவினரும், சைவநெறியினரால் மகிழ்பவரும் ஆகிய சிவபிரான் சார்பு; பசுக்கூட்டத்தின்மேல் அன்புடன் வாழும் ஆயர்கள், காளைக்கூட்டத்தை அன்புடன் பிரித்துவைப்பதும், சிறந்த வணிகர் காழ்ப்புக் கொள்ளாமல் வாழ்வதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம் :** ஆயர், காளைகளைப்பிரித்து வைப்பதன் மூலம் கருத்தரிப்புக் காலத்தை நீட்டித்து அதன் மூலம் பால்கறவைக் காலத்தை நீட்டித்தல்.

**இலக்கணக்குறிப்பு :** சேகுலவா ரம்பிரிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

73. பன்ன அரும்தமிழ்கேட் பாரும்அவர் மாளிகையும்
தென்ன மலையன்நிகர் சிங்கையே - இன்னலெறி
வானடிக்கு நாடகத்தார் வாழவருள் வார்சுடலைக்
கானடிக்கும் நாடகத்தார் காப்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : இன்னல் எறிவான் அடிக்கு நாடு அகத்தார் வாழ அருள் சுடலைகான் நடிக்கும் நாடகத்தார். காப்பு. அருந்தமிழ் பன்னக்கேட்பாரும் தென்னன் மலையன் நிகர் சிங்கை. மாளிகையும் தென்னன் மலையன் நிகர் சிங்கை.

**குறிப்புரை** : இன்னல் எறிவான்= துன்பம் துடைப்பவன். அடிக்கு நாடு அகத்தார் வாழ= திருவடியை விரும்பும் உள்ளத்தவர் வாழ. அருள் சுடலைக்கான் நடிக்கும் நாடகத்தார் காப்பு= அருள்புரிபவராய்ச் சுடுகாட்டில் கூத்தாடும் நடிகராகிய சிவபிரான் காக்குமிடம். அருந்தமிழ் பன்ன கேட்பாரும்= அரியதமிழ்ச் சிறப்பினைச் சொல்ல அதனைக் கேட்பவரும். தென்னன் மலையன் நிகர் சிங்கை= பாண்டியனையும் அகத்தியரையும் ஒத்துவிளங்கும் சிங்கை. அவர் மாளிகையும்= கேட்பவர்களின் இருப்பிடமும். தென்னன் மலையன் நிகர் சிங்கை= பாண்டியனின் அரண்மனையையும், அகத்தியரின் பொதிகையையும் ஒத்ததாகும். ( மிகப்பெரியதாகும் ).

**பொழிப்புரை** : துன்பம் துடைப்பவனின் திருவடியை விரும்பும்மனத்தவர் வாழ, அருள்செய்யச் சுடுகாட்டில் நடிக்கும் நடிகன் - சிவபிரான் காக்குமிடம்; அரிய தமிழின்சிறப்பினைப் பிறர்சொல்லக் கேட்டுப் பாண்டியனையும் அகத்தியரையும் ஒத்தவர் வாழிடம் சிங்கையாகும். அவ்வாறு கேட்டவர் மாளிகையும் பாண்டியனின் அரண்மனையையும் அகத்தியரின் பொதிகையையும் போல்பெரியதாகும்.

**இலக்கணக்குறிப்பு** : எறிவான் - வினையாலணையும் பெயர். அடிக்கு - உருபு மயக்கம். தென்னன் மலையன் - செம்மொழிச்சிலேடை.

74. சொல்வந்த நல்லோர் தொகுமனையும் சாலிகளும்
செல்வந் தமர்உறவாம் சிங்கையே - இல்வந்து
சேயத் தலைக்கறியார் தீப்பசியார் தீயஎனை
மாயத் தலைக்கறியார் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : இல்வந்து சேய தலக்கறியார் தீப் பசியார் தீயஎனை மாயத்து அலைக்க அறியார் வாழ்வு; சொல்வந்த நல்லோர் தொகுமனை செல்வம் தமர் உறவாம் சிங்கை; சாலிகளும் செல் வந்து அமர் உறவுஆம் சிங்கை.

**குறிப்புரை** : இல்வந்து= சிறுத்தொண்டரின் வீட்டுக்குவந்து. செம்மைத்தலைக்கறியார்= சிறந்த தலைக்கறி கேட்டவாராகிய. தீப்பசியார்= கொடிய பசியுடையவர். தீய எனை= தீயவனாகிய என்னை. மாயத்து அலைக்றியார்= உலகமாயையில் என்னை அலைகழிக்க அறியாதவர் - சிவபிரான். சொல்வந்த= புகழ்வாய்ந்த. தொகுமனை= ஈட்டிக்கட்டிய வீடு. செல்வம் தமர் உறவாம் சிங்கை= செல்வமும் தம்மவரும் கலந்திருக்கும் சிங்கை. சாலிகள்= நெற்பயிர்கள். செல் வந்து அமர் உறவு ஆம் சிங்கை= மேகம் வந்து தங்கும் உறவுடைய சிங்கையாகும்.

**பொழிப்புரை** : சிறுத்தொண்டரின் வீட்டுக்குவந்து சிறந்த தலக்கறிகேட்டவரும், கொடிய பசியுடையவரும், என்னை உலகமாயையில் அலைகழிக்க அறியாதவரும் ஆகிய சிவபிரான் வாழிடம்; புகழ்வாய்ந்த நல்லவர்கள் செல்வத்தை ஈட்டிக்கட்டிய வீட்டில் செல்வமும் தம்மவரும் கலந்திருப்பதும், நெற்பயிர்களில் மேகம்வந்து அமர்ந்து உறவுகொள்வதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : வந்த பைரவஅடியவர் சிறுத்தொண்டரிடம் தலைக்கறி கேட்டது -

" சொன்ன முறையில் படுத்தபசுத் தொடர்ந்த உறுப்புஎல்லாம் கொண்டு
மன்னு சுவையில் கறியாக்கி மாணஅமைத் தீரே என்ன
அன்னம்அனையார் **தலைஇறைச்சி அமுதுக்குஆகாது எனக்கழித்தோம்**
**என்னஅதுவும் கூடநாம் உண்பதுஎன்றார் இடர்தீர்ப்பார். ( பெரியபு . 37 38 )**

**இலக்கணக்குறிப்பு** : செல்வந் தமர்உறவாம் - பிரிமொழிச்சிலேடை.

75. மானந் தரும்பொருநர் வாளிடத்தும் பூந்தடத்தும்
சேனந் துவண்டுலவும் சிங்கையே - ஞானம்
தழைத்தவரைக் காப்பார் தழல்விழிக்கும் பாம்பால்
இழைத்தவரைக் காப்பார் இடம்.

**மடக்கடி பிரித்தல் + கூட்டுமுறை** : ஞானம் தழைத்தவரைக் காப்பார், தழல்விழிக்கும் பாம்பால் இழைத்தவரைக் காப்பார் இடம்; மானம் தரும்பொருநர் வாளிடத்தும் சேனம் துவண்டு உலவும் சிங்கை; பூந்தடத்தும் சேனந் துவண்டு உலவும் சிங்கை..

**குறிப்புரை** : தழல் விழிக்கும் நெருப்புப்போல் பார்க்கும். பாம்பால் இழைத்தவரைக் காப்பார் = நாகம் தீண்டிய அப்பூதியடிகளின்மகன்மூத்த திருநாவுக்கரசைக் காத்த சிவபிரான். மானம்= கௌரவம். பொருநர்= போர்வீரர் வாளிடத்தும்= வாள் ஓச்சிய இடத்திலும். சேனம்= பருந்து. துவண்டு உலவும்= வளைந்து வளைந்து பறக்கும். பூந்தடத்து= மலர்க்குளத்தில். சேல் நண்டு வண்டு உலவும்= கெண்டைமீன், சங்கு, வண்டுகள் உலவும்.

**பொழிப்புரை** : ஞானம் தழைத்த ஞானிகளைக் காப்பவரும், சினத்தால் நெருப்புப்போல் பார்க்கும் நாகம்தீண்டிய அப்பூதியடிகளின் மகன் மூத்ததிருநாவுக்கரசைக் காத்தவரும் ஆகிய சிவபிரானுறையும் இடம்; நாட்டின் கௌரவத்தை - பெருமையைக் காக்கும் வீரர்கள் வாளோச்சிய இடத்தில் ( பகைவர் கொலையுண்டதால் பிணம் தின்னப் ) பருந்துகள் வளைந்து வளைந்து பறப்பதும்; மலர்க்குளத்தில் கெண்டைமீன், சங்கு, வண்டுகள் ஆகிய உலவுவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : நாகம் தீண்டிய மூத்ததிருநாவுக்கரசை அப்பரடிகள் மூலம் காத்தது : .
" ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார் அருளும் வண்ணம்
பாஇசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார் " ( பெரியபு. 1822 )

**இலக்கணக்குறிப்பு** : சேனந் துவண்டுலவும் - பிரிமொழிச்சிலேடை .

76. சொன்முனிவன் இன்னிசையும் தோகையர்மென் சொல்லிசையும்
தென்மலைய வெற்புருக்கும் சிங்கையே - பொன்மலைவில்
கொண்டு புரம்கடந்தார் கோரவிடம் வாய்நிறைய
மண்டு புரங்கடந்தார் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : பொன்மலை வில்கொண்டு புரம்கடந்தார் கோரவிடம் வாய்நிறைய உண்டு புரங்கள் தந்தாரர் வாழ்வு; சொல்முனிவன் இன்னிசை, தென்மலைய வெற்புஉருக்கும் சிங்கை; தோகையர் மென்சொல்லிசையும் தென்மலைய எற்பு உருக்கும் சிங்கை.

**குறிப்புரை** : பொன்மலை = மேருமலை. வில்கொண்டு= வில்லாகக் கொண்டு. புரம்கடந்தார்= முப்புரங்களையும் வென்றவர். கோரவிடம்= கொடிய நஞ்சினை. வாய்நிறைய மண்டு=வாய்நிரம்பக் குடித்து.. புரங்கள் தந்தார்= அண்டங்களைக்காத்தவர். சொல்முனிவன்= புகழ்வாய்ந்த அகத்தியமுனிவர்.இன்னிசையும்

தென்மலைய வெற்பு உருக்கும்= இனிய வீணைஇசை பொதிகைமலையை உருகச்செய்யும். தோகையர் மென்சொல்இசை= மயிலொத்த மகளிரின் மென்மையானசொற்களின் இனிமை. தென்மலைய= தேனொத்து விளங்கி. எற்பு உருக்கும்= எலும்பையும் உருகச்செய்யும்.

**பொழிப்புரை** : மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை வென்றவரும், கொடிய நஞ்சினை வாய்நிரம்பப் பருகி அண்டங்களைக் காத்தவரும் ஆகிய சிவபிரான் வாழிடம்; புகழ்வாய்ந்த அகத்தியரின் வீணை இசை பொதிகைமலையை உருகச்செய்ததும், மயில்போன்றவரின் இனிய சொல்லின் இசை, தேனொத்து விளங்கிக் கேட்டோர் எலும்பையும் உருகச்செய்வதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : இராவணனுடனான இசைப்போட்டியில் அகத்திய முனிவரின் வீணையிசை, பொதிகைமலையயும் உருகச்செய்தது என்பது புராணவரலாறு.

**இலக்கணக்குறிப்பு** : எற்பு - செய்யுள் விகாரம். தென்மலைய வெற்புருக்கும் பிரிமொழிச்சிலேடை.

77. பூணம் புயத்திளைஞர் பொற்படமும் வாம்பரியும்
சேணம் பரத்திரியும் சிங்கையே - தூணம்
கொடுக்குநர கேசரியார் கோளொழித்தார் என்னைக்
கடுக்குநர கேசரியார் காப்பு.

**மடக்கடிம் பிரிப்பு + கூட்டுமுறை** : தூணம் கொடுக்கும் நரகேசரியார் கோள் ஒழித்தார் என்னைக் கடுக்கும் நரகே சரியார் காப்பு; பூன் அம் புயத்துஇளைஞர் பொற்படம் சேண்அந்தரம் திரியும் சிங்கை; வாம்பரியும் சேணம்தரத் திரியும் சிங்கை.

**குறிப்புரை** : தூணம் கொடுக்கும்= தூணிலிருந்து வெளிப்பட்ட. நரகேசரியார்= நரசிம்மம். கோள் ஒழித்தார்= மதத்தை ஒழித்தவர். கடுக்கும்= துன்புறுத்தும். நரகே சரியார்= நரகில் விடாதவர். பூண் அம் புயத்து இளைஞர்= பூணணிந்த அழகிய தோள்களுடையவர் வீரர். பொன்படம்= விருதுக்கொடி. சேண் அம்பரத்து இரியும் சிங்கை= நெடுந்தொலைவு வானில் பறக்கும் சிங்கை. வாம்பரியும் சேணம் பரத் திரியும்= தாவிச்செல்லும் குதிரை சேணத்துடன் திரியும் சிங்கை.

**பொழிப்புரை** : தூண்கொடுத்த = தூணில்வெளிப்பட்ட - நரசிங்கத்தின் வெறியை, சரபப்பறவையாகவந்து ஒழித்தவரும், கொடிய நரகில் என்னை விடாதவரும் ஆகிய சிவபிரான் காக்குமிடம்; அணிகலன் அணிந்த அழகிய தோள்களுடைய வீரர்களின் விருதுக்கொடி வானில் நெடுந்தொலைவில் பறப்பதும், தாவிச்செல்லும் குதிரைகள் சேணத்துடன் பூட்டப்பட்டுத் திரிவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சேணந் தரத்திரியும் - பிரிமொழிச்சிலேடை.

78. மீனுகளும் பூந்தடத்து மேதிகளும் மென்புறவும்
தேனுவள மேய்ந்துலவும் சிங்கையே - பானு
வினப்பற்று வைத்தார் இமயமகள் மேலே
மனப்பற்று வைத்தார் மனை.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : அ பானுவின் பல் துவைத்தார் இமயமகள் மேலே மனப்பற்று வைத்தார் மனை; மீன் உகளும் பூந்தடத்து மேதிகளும் தேனு வளம் ஏய்ந்து உலவும் சிங்கை, மென்புறவும் தேனுவளம் மேய்ந்து உறையும் சிங்கை.

**குறிப்புரை** : அ பானுவின்= தக்கன் வேள்வியில் கலந்துகொண்ட அந்தச்சூரியனின். பல் துவைத்தார்= பல்லைஒடித்தவர். மனப்பற்று= அன்பு. மீன் உகளும்= மீன்கள் புரண்டு திரியும். பூந்தடத்து மேதிகள்= தேனுவளம் ஏய்ந்து உலவும்= காமதேனுப்போல் பால்வளம்தந்து உலவும். மென்புறவு வளம்= அழகிய முல்லைக்காட்டின் வளம். தேனு மேய்ந்து உலவும்= பசுக்கள் மேய்ந்து உலவும்.

**பொழிப்புரை** : தக்கன் வேள்வியில் கலந்துகொண்ட் சூரியனின் பற்களை ஒடித்தவரும், பார்வதி தேவியின் மேல் அன்புகொண்டவருமாகிய சிவபிரான் மனை; மீன்கள் புரண்டு திரியும் அழகிய குளத்தில் எருமைகள்காமதேனுவைப்போல் பால்வளம் தந்து உலவுவதும், அழகிய முல்லைக்காட்டில் பசுக்கள் மேய்ந்து உலவுவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சூரியனின் பற்களைத் தகர்த்தது -

" சூரியனார் தொண்டை வாயினில் பற்களை
வாரி நெரித்தாவா றுந்தீபற
மயங்கிற்று வேள்விஎன்று உந்தீபற " ( திருவாசகம். 309 )

இலக்கணக்குறிப்பு : தேனு வளமேய்ந்து உலவும் _ பிரிமொழிச்சிலேடை.

79. ஊக்கத்(து) அமர்க்களம்புக் கோர்விழியும் மாமடமும்
தீக்கைக் கனல்வழங்கும் சிங்கையே - யாக்கைஎனும்
தோல்பொதி யச்சாரலார் தொண்டரெனக் காக்குமிளங்
கால்பொதியச் சாரலார் காப்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : யாக்கை எனும்தோல்பொதி அச்சார் அலார், தொண்டர் எனக்காக்கும் இளங்கால் பொதியச்சாரலார் காப்பு; ஊக்கத்து அமர்க்களம் புக்கோர் விழியும் தீக்கைக்கு அனல் வழங்கும் சிங்கை; மாமடமும் தீக்கைக்கு அனல் வழங்கும் சிங்கை.

**குறிப்புரை** : யாக்கைஎனும் தோல்பொதி அச்சார் அலார்= உடம்புஎன்கிற தோலால் மூடபட்ட உடம்பில்லாதவர். தொண்டர் எனக்காக்கும்= இவரடியவர் என்று காக்கின்ற. இளங்கால் பொதியச்சாரலார்= இளந்தென்றலுடைய பொதிகைச்சாரலில் உள்ளவர். ஊக்கத்து= உள்ளமிகுதியால். அமர்க்களம்= போர்க்களம். விழியும் தீக்கைக்கு அனல் வழங்கும் சிங்கை= விழிகள் பகைவரை அழிப்பதற்கு நெருப்பைக்கக்கும் சிங்கை. மாமடம்= சிறந்த மடங்கள். தீக்கைக்கு அனல் வழங்கும் சிங்கை= பாசங்களை அழிக்க ஓமத்தீ வழங்கும் சிங்கை.

**பொழிப்புரை** : உடம்பு என்கிற தோலால் மூடப்பெற உடம்பினைச் சாராதவரும், நம்தொண்டர் இவர்என்றுகாப்பவராய் இளந்தென்றல் வீசும் பொதிகச்சாரலில் வாழ்கிறவருமாகிய சிவபிரான் காக்குமிடம்; உள்ளமிகுதியால் போர்க்களம் புகுந்த வீரர்களின் விழிகள் பகைவரை அழிக்கநெருப்பினைக் கக்குவனவும்; சிறந்த திருமடங்கள், அடியவர்களின் பாசத்தை அழிக்கும் தீக்கைவழங்க ஓமத்தீ வளர்ப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீக்கைக்கு அனல் வழங்கும் - செம்மொழிச்சிலேடை.

80. மேக்களவிட் டோங்குதமிழ் வெற்புமர விந்தமும்சேர்
தேக்கமரப் பூம்பணைபாய் சிங்கையே - நீக்கமிலா(து)

எங்கும் நிலாவிடுவார் நீரச் சடாடவிமேல்
பங்கு நிலாவிடுவார் பற்று.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நீக்கம் இலாது எங்கும் நிலாவிடுவார், நீரச் சடாடவிமேல்பங்கு நிலாவிடுவார் பற்று; மேக்கு அளவிட்டு ஓங்கு தமிழ்வெற்பும் தேக்கமரப் பூம்பணைபாய் சிங்கை; அரவிந்தமும்சேர் தேக்கு அமரப் பூம்பணைபாய் சிங்கை.

**குறிப்புரை** : நிலாவிடுவார்= பரவியுள்ளவர். நீரச் சடாடவி மேல்= கங்கைநீருடைய சடைக்காட்டின் மேல். நிலா விடுவார்= பிறைநிலவை விளங்கச்செய்தவர். மேக்கு அளவிட்டு ஓங்கு= மேற்குத்திசையில் மிகமிக உயரமான. தமிழ் வெற்பு = பொதிகைமலை. தேக்கமரப் பூம்பணை பாய்சிங்கை= தேக்குமரங்களின் பெருமை பெருகும். அரவிந்தமும்= தாமரைமலரும். தேக்கு அமர பூம்பணை பாய்= இனியதேனும் சேர்ந்து. பொருந்த அழகிய நீர்நிலையில் பெருகும்.

**பொழிப்புரை** : எவ்விடத்தையும்நீக்காமல் எங்கும் பரவியவரும், கங்கைநீருடைய சடைக்காட்டின் மேல் பிறைநிலவை விளங்கச்செய்தவரும் ஆகிய சிவபிரான் தங்கியுள்ள இடம்; மேற்குத்திசையில் உள்ள மிகஉயரமான பொதிகைமலையில் தேக்குமரங்களின் பெருமை பெருகுவதும், தாமரைமலரும் இனிய தேனும் சேர்ந்து பொருந்த அழகிய நீர்நிலையில் பெருகுவதுமாகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தேக்கமரப் பூம்பணை - பிரிமொழிச்சிலேடை.

81. கொற்றத் தகரும் குடிப்பிறந்த கொள்கையரும்
செற்றத் தமர்வளர்க்கும் சிங்கையே - முற்றப்
பொறைக்கமடத் தோட்டார் புலன்போய்என் நெஞ்சை
மறைக்கமடத் தோட்டார் மனை.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : முற்றப்பொறைக் கமடத்து ஓட்டார், புலன்போய் என்நெஞ்சை மறைக்க மடத்து ஓட்டார் மனை; கொற்றத் தகரும் செற்றத்து அமர்விளைக்கும் சிங்கை; குடிப்பிறந்த கொள்கையர் செற்றத்தமர் வளர்க்கும் சிங்கை.

**குறிப்புரை** : முற்றப்பொறைக் கமடம்= முழுமையான பொறுமையுடைய ஆமை. ஓட்டார்= ஓட்டினை ஏந்தியவர். புலன்போய் என் நெஞ்சை மறைக்க= அறிவு எனது நெஞ்சின் நன்னிலையை மறைக்க. மடத்து ஓட்டார்= என்னை அறியாமையில் செலுத்தாதவர். கொற்றத் தகர்= வெற்றிபொருந்திய ஆட்டுக்கிடாய். செற்றத்து அமர்விளைக்கும்= சினத்துடன் போரிடும். குடிப்பிறந்த கொள்கையர்= நற்குடிப்பிறந்த உயர்கொள்கையர். செற்றத் தமர் வளர்க்கும்= தம்மைச் சினந்த தம்மவரை வளர்க்கும்.

**பொழிப்புரை** : முழுமையான பொறுமையுடைய ஆமையோட்டினை ஏந்தியவரும், என் அறிவு என்நன்மனத்தை மறைக்குமாறு என்னை அறியாமையில் செலுத்தாதவரும் ஆகிய சிவபிரான் வீடு; வெற்றிபொருந்திய ஆட்டுக்கிடாய் சினத்துடன் போரிடுவதும், நற்குடியில் பிறந்த நற்கொள்கையரும் தம்மைச்சினந்த தம்மவரையும் வளர்ப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : செற்றத் தமர்விளைக்க்கும் - பிரிமொழிச்சிலேடை.

82. எவ்வெந்தப் பூம்பொழிலும் ஈர்ங்குமுத நாண்மலரும்
செவ்வந்திப் போதலரும் சிங்கையே - அவ்வந்தி
பிட்டுக் கலந்தார் பெருநீர்ப் பழம்புவனத்
தட்டுக் கலந்தார் தலம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை:** அ வந்தி பிட்டுக்கு அலந்தார், பெருநீர்ப் பழம்புவனத் தட்டுக் கலந்தார் தலம்; எவ்வெந்தப் பூம்பொழிலும் செவ்வந்திப் போது அலரும் சிங்கை; ஈர்ங்குமுத நாள்மலரும் செவ் அந்திப்போது அலரும் சிங்கை.

**குறிப்புரை :** அ வந்தி பிட்டுக்கு அலந்தார்= மதுரையில் வாழ்ந்த பிட்டு வாணிச்சியாகிய வந்தி என்பவளின் பிட்டுண்ண. அலந்தார்= துன்புற்றவர். பெருநீர்ப் பழம்புவனத் தட்டுக் கலந்தார்= கடல்சூழ்ந்த பெரிய பழைமையான அண்டஅடுக்குகளில் கலந்தவர். பூம்பொழில்= அழகிய சோலை. செவ்வந்திப் போது அலரும்= செவந்திமலர் மலரும். ஈர்ங்குமுத நாள்மலர்= பசுமையான குமுதப் புதுப்பூ.. செவ் அந்திப்போது அலரும்= செவ்வானம் தோன்றும் மாலைநேரத்தில் மலரும் .

**பொழிப்புரை :** மதுரையில் வாழ்ந்த பிட்டுவாணிச்சியாகிய வந்தியிடம் பெற்ற பிட்டுக்காக மண்சுமந்து துன்புற்றவரும், பழைமையான கடல் சூழ்ந்த அண்டத்தட்டுகளில் கலந்தவரும் ஆகிய சிவபிரான் இருப்பிடம், எல்லா மலர்ச்சோலைகளிலும் செவ்வந்திபூக்கள் மலர்வதும், பசுமையான குமுதமலர்கள் செவ்வானுடைய மாலையில் மலர்வதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம் :** வந்திப்பிட்டுகுத் துன்புற்றது : மண்சுமந்ததும் பிரம்படிபட்டதும் ஆகியவற்றைப் திருவிளையாடற்புராணம் பிட்டுக்கு மண்சுமந்த படலத்தில் விரிவாகக் காணலாம்.

**இலக்கணக்குறிப்பு :** செவ்வந்திப்போது - பிரிமொழிச்சிலேடை.

83. நீரகத்தே உற்றாளும் நீள்வணிகர் பொற்றோளும்
சீரகத் தார்மணக்கும் சிங்கையே - தாரகத்தை
அந்தத்(து) எனக்குனித்தான் அன்பின்உப தேசிப்பான்
தந்தத் தெனக்குனிப்பான் சார்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை :** தாரகத்தை அந்தத்து எனக்கு உனித் தான்உபதேசிப்பான் தம் தத்(து) எனக்குனிப்பான் சார்பு; நீர் அகத்தே உற்று ஆளும் சீரகத்தார் மணக்கும் சிங்கை; நீள்வணிகர் பொன்தோளும் சீரகத் தார்மணக்கும் சிங்கை.

**குறிப்புரை :** தாரகத்தை= தாரகமந்திரத்தை - பிரணவமந்திரத்தை. அந்தத்து= என் இறுதிப்பொழுதில். எனக்கு உனி= என்னை நினைத்து. தான்அன்பின் உபதேசிப்பான், தம் தத்து எனக் குனிப்பான்= தம் தத்து என்றஒலி எழக்கூத்தாடும் சிவபிரான் \ என்னை மகன்மை கொண்டு ஆடுகிறவன் ஆகிய சிவபிரான், நீர் அகத்தேஉற்று ஆளும் சீர் கத்தார் மணக்கும் சிங்கை= பாற்கடலில் பள்ளிகொண்டு உலகைக்காத்து ஆளும் சிறப்புப் பொருந்தியவரின் நன்னிலை விளங்கும் சிங்கை, நீள்வணிகர் பொன்தோளில்= பெருவணிகரின் அழகிய தோளில். சீர்அகத் தார் மணக்கும் சிங்கை= சிறப்புப்பொருந்திய மாலை மணப்பது சிங்கையாகும்.

**பொழிப்புரை :** பிரணவமந்திரத்தை என் இறுதிப்பொழுதில் என்னைநினைத்து உபதேசிப்பவனும், தம் தத்து என்ற தாளஒலிஎழக் கூத்தாடுகிறவனும் / என்னைத் தன் சுவீகாரம் - மகன்மை கொண்டு ஆடும் சிவபிரான் சார்ந்த இடம்; பாற்கடலில் பள்ளிகொண்டு உலகை ஆள்கின்ற திருமாலின் நன்னிலை - காத்தல்தொழில் விளங்குவதும், பெருவணிகரின் அழகிய தோள்களில் சிறப்புடைய மாலை மணப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு :** சீரகத்தார் - பிரிமொழிச்சிலேடை.

84. ஈவதற்(கு)அன் பாம்வணிகர் இல்லுமறி வோர்மனமும்
தீவகத்தின் சாந்தமுறும் சிங்கையே - நோவறுத்தென்

பாடற் களிப்பான் பணித்ததிருத் தாள்வழுத்தும்
ஆடற் களிப்பான் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : நோவு அறுத்து என்பாடல் களிப்பான், பணித்த திருத்தாள் வழுத்தும் ஆடற்கு அளிப்பான் அகம்; ஈவதற்கு அன்பாம் வணிகர் இல்லும் தீவகத்தின் சாந்தமுறும் சிங்கை. அறிவோர் மனமும் தீவகத்தின் சாந்தமுறும் சிங்கை.

**குறிப்புரை** : என்நோவு அறுத்து= என்துன்பங்களை நீக்கி. பாடல்களிப்பான்= பாடல்கேட்டு மகிழ்பவன். பணித்த= அருள்புரியும். ஆடல் களிப்பான்= சொல்கேட்டு மகிழ்கிறவன். ஈவதற்கு அன்பாம்= கொடுப்பதில் அன்புகாட்டும். இல்= வீடு. தீவகத்தின் சாந்தமுறும்= துறைமுகம்போல் குளிர்ச்சியுடன் இருக்கும். அறிவோர் மனம்= அறிஞர் மனம். தீவகத்தின்= விளக்குப்போல். சாந்தமுறும்= ஒளியுடன் அமைதியாக இருக்கும்.

**பொழிப்புரை** : துன்பங்களை நீக்கி என்பாடல்கேட்டுக் களிப்பவனும், அருள்புரியும் திருவடிகளை வழுத்தும் சொல்கேட்டு மகிழ்கிறவனுமாகிய சிவபிரான் இல்லம்; கொடுப்பதில் அன்புகாட்டும் வணிகர் வீடு துறைமுகம்போல் குளிர்ச்சியாக இருப்பதும், அறிஞர்மனம் ஒளிவிளக்குப்போல் அமைதியுடன் ஒளிர்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : தீவகத்தின் சாந்தமுறும் - செம்மொழிச்சிலேடை.

85. விந்தைக் கிளையாம் விறலியரும் மெய்யறிவும்
சிந்தைச் சுகம்பயிற்றும் சிங்கையே - முந்தைக்
கடவுள் மறைத்தலையார் காதலித்தார் தம்பால்
கடவுள் மறைத்தலையார் காப்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : முந்தைக் கடவுள்மறைத் தலையார், காதலித்தார் தம்பால் கடவுள்மறைத்து அலையார் காப்பு; விந்தைக் கிளையாம் விறலியரும் சிந்தைச் சுகம் பயிற்றும் சிங்கை, மெய்யறிவும் சிந்தைச் சுகம்பயிற்றும் சிங்கை.

**குறிப்புரை** : முந்தை= பழைமையான. கடவுள் மறைத்தலையார்= தெய்வத்தன்மையுடைய உபநிடதத்தின் உச்சியில் உள்ளவர். காதலித்தார் தம்பால்= தன்மேல் அன்புகாட்டியவரிடம். கடவுள் மறைத்து அலையார்= தம்கடவுள்தன்மையை மறைத்துத் துன்புறுத்தாதவர். விந்தைக் கிளையாம் விறலியர் சிந்தைச் சுகம்பயிற்றும் சிங்கை= திருமகளின் சுற்றமான விறலியர் மனம்மகிழ, கிளிகளைப் பயிறும் சிங்கை. மெய்யறிவும் சிந்தைச்சுகம் பயிற்றும் சிங்கை= ஞானம் மனச்சுகத்தைப் பழக்கும் சிங்கை.

**பொழிப்புரை** : கடவுள்தன்மையுடையதும் பழைமையானதுமான உபநிடதத்தின் உச்சியில் உள்ளவரும், தன்னிடம் அன்புகாட்டியவரிடம் தனது கடவுள்தன்மையை மறைக்காமல் அருள்பவரும் ஆகிய சிவபிரான் காக்குமிடம்; திருமகளுக்குச் சுற்றம் எனத்தகும் விறலியர் மனம்மகிழ, கிளிகளைப் பயிற்றுவதும், ஞானம், மனச்சுகத்தைப் பழக்குவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சிந்தைச் சுகம் பயிற்றும் - செம்மொழிச்சிலேடை.

86. ஆராயும் முத்தமிழும் அத்தமிழ்மந் தாநிலமும்
சீராய் அசைநடைகூர் சிங்கையே - போரானை
வேகத் தசைத்தோன் மிடையும் இருள்ளரிப்ப
வாகத்(து) அசைத்தோன் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : போர் ஆனை வேகத்து அசைத்தோன், மிடையும் இருள் எரிப்ப வாகத்து அசைத்தோன் அகம்; ஆராயும் முத்தமிழ் சீராய் அசைநடைகூர் சிங்கை, அத்தமிழ் மந்தாநிலமும் சீராய் அசை நடைகூர் சிங்கை.

**குறிப்புரை** : போர் ஆனை= ( தாருகவனத்து முனிவர்கள் ஏவப் ) போரிடவந்த யானையை விரைந்து ( உரித்து ) போர்த்திக்கொண்டவன். மிடையும் இருள் எரிய= செறிந்த பிறவி இருள் அழிய. வாகத்துஅசைத்தோன்= ஊர்தியில் ( எருதில் ) தங்கியவன். ஆராயும் முத்தமிழ். சீராய் அசைநடை கூர்= சீர்களாக இயங்கி மிகவும் நடக்கும். தமிழ்மந்தாநிலம்= பொதிகைத் தென்றல். சீராய் அசைநடைகூர்= மென்மையாக இயங்கி வீசும்.

**பொழிப்புரை** : தாருகவனத்து முனிவர்கள் ஏவப் போரிடவந்த யானையை விரைந்து உரித்துப் போர்த்திக்கொண்டவனும், செறிந்த பிறவியாகிய இருளை அழிக்க, எருதாகிய ஊர்தியில் வந்தவனும் ஆகிய சிவபிரான் ஊர்; அறிஞர்கள் ஆராயும் முத்தமிழும் அசைகளுடைய சீர்களாக இயங்கி மிகநடப்பதும், பொதிகைத்தென்றல் மென்மையாக இயங்கி வீசுவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சீராய் அசைநடை கூர் - செம்மொழிச்சிலேடை.

87.
நாவிக் குழல்முடிக்கும் நாரியரும் பல்லுயிரும்
சீவித் தளவளவும் சிங்கையே - காவிக்
களத்து விடக்கறுப்பார் காமியத்துப் போம் என்
உளத்து விடக்கறுப்பார் ஊர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : காவிக்களத்து விடக் கறுப்பார், காமியத்துப்போம் என் உளத்து விடக்கு அறுப்பார் ஊர்; நாவிக்குழல் முடிக்கும் நாரியரும் சீவி தளவு அளவும் சிங்கை; பல்லுயிரும் சீவித்து அளவளவும் சிங்கை.

**குறிப்புரை** : காவிக் களத்து= செங்காவிஒத்த கழுத்தில். விடக்கறுப்பர்= நஞ்சினால் ஆன கருமையர். காமியத்துப்போம்= ஆகாம்ய வினை - கன்மமலம் - வழிச்செல்லும். விடக்கு அறுபார்= மனக்குற்றத்தை அறுப்பவர். நாரியர் நாவிக்குழல்= மகளிர் கத்தூரி பூசியகூந்தல். சீவி தளவு அளவும்= சீவி முல்லைமலர் சூடும். பல் உயிரும் சீவித்து அளவளவும்= பலவகைப்பட்ட உயிரினங்களும் அளவளாவி வாழும்.

**பொழிப்புரை** : செங்காவிமலர் ஒத்த கழுத்தில் நஞ்சினால் ஏற்பட்ட கரிய நிறமுடையவரும், கன்மமலத்தின் வசப்பட்டுச் செல்லும் என்மனக்குற்றத்தை அறுப்பவரும் ஆகிய சிவபிரான் ஊர்; மகளிர் கத்தூரி பூசிய கூந்தலைச் சீவி முல்லைமலர் சூடுவதும், பலவகைப்பட்ட உயிர்களும் தம்முள் அளவளாவி வாழ்வதுமாகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சீவித் தளவளவும் - பிரிமொழிச்சிலேடை.

88.
வன்னவிலைப் பாவையர்கை வாளுகிரும் மான்குயிலும்
சின்னவடு கோதியிடும் சிங்கையே - மின்னவிரும்
வேணியினா கத்தான் விதிதலைமா லைச்சூல
பாணியினா கத்தான் பற்று.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : மின்அவிரும் வேணியின் ஆகத்தான், விதிதலை மாலை சூலபாணியினான் நாகத்தான் பற்று; வன்னவிலைப் பாவையர் கைவாள் உகிரும் சின்னவடு கோதிஇடும் சிங்கை, மான் குயிலும் சின்னவடு கோதியிடும் சிங்கை.

**குறிப்புரை** : மின் அவிரும் வேணியினான் ஆகத்தான்= மின்னல்போல் ஒளிரும் சடைமுடியுடைய திருமேனியன். விதிதலைமாலை= பிரமனின் மண்டைஓட்டுமாலை. சூலபாணியினான்= சூலத்தினைக் கையில் ஏந்தியவர். நாகத்தான்= நாகஅணிகலன் அணிந்தவர். வன்னவிலைப் பாவையர்= அழகிய விலைமாதர். கை வாள்உகிர்= கையில் உள்ள கூர்மையான நகம். கோதி சின்ன வடு இடும்= தன்னைக்கூட வரும் ஆண்மக்களின் தலையைக் கோதி சின்ன வடுவை இடும். மான் குயில்= பெண்குயில். கோதி சின்ன வடு இடும்= அலகால் கோதி சிறிய புண்காய்ந்த வடுக்களாகிய பொருக்குகளை வீழ்த்தும்.

**பொழிப்புரை** : மின்னல்போல் ஒளிரும் சடையுடைய திருமேனியனும், பிரமனின் தலைகளை மாலையாக அணிந்தவனும், நாகத்தை அணிகலனாக அணிந்தவனுமாகிய சிவபிரான் வாழிடம்; அழகிய விலைமாதர்தம் கையில் உள்ள கூரிய நகத்தால், தம்மைக்கூடுவோர் தலையைக் கோதி சிறிய வடுக்களை இடுவதும், பெண்குயில் தன்னுடம்புப் புண்காய்ந்த பொருக்குகளைத் தன் அலகால் கோதி வீழ்த்துவதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : விலைமாதர் தன்னைக்கூடுவோர் தலையை அன்புடன் கோதுவார்போல் சின்னவடு உண்டாக்குவது, அவ்வடுவில் அவர்கைபடும்போதெலாம் தன்நினைவு வர, உடன் தன்னைதேடி வந்து கூடவருவர் என்றதன் பொருட்டாகலாம்.

**இலக்கணக்குறிப்பு** : சின்னவடு கோதி இடும் - செம்மொழிச் சிலேடை.

**89.** முந்துதவச் செய்கையரும் மொய்குழலார் கைவிரலும்
செந்துவரைத் தண்ணளிகூர் சிங்கையே - இந்து
முடிக்குத் தரித்தார் முனைவிசயன் போர்வில்
அடிக்குத் தரித்தார் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : இந்து முடிக்குத்தரித்தார், முனை விசயன் போர் வில்அடிக்குத் தரித்தார் அகம்; முந்து தவச்செய்கையர் செந் துவரைத் தண்ணளிகூர் சிங்கை; மொய்குழலார் கைவிரல் செந்து வரை தண்ணளிகூர் சிங்கை.

**குறிப்புரை** : இந்து முடிக்குத் தரித்தார்= பிறையைச் சடையில் தரித்தவர். முனை= முன்னாளில். விசயன் போர்வில் அடிக்குத் தரித்தார்= அருச்சுனனுடன் செய்தபோரில், அவனது வில்லடியைத்தலையில் பெற்றவரும். முந்து= முதிர்ந்த. தவச்செய்கையர்= தவமுடையவர். செந் துவரைத் தண்ணளி கூர்= சிறந்த துவாரகைக்கண்ணனின் கருணை மிகுவதும். மொய்குழலார்= அடர்ந்த கூந்தலுடைய மகளிர். செந்து= சிவந்து. வரை= இரேகை. தண்ணளிகூர்= கருணை மிக்கதும்.

**பொழிப்புரை** : பிறையைச் சடையில் தரித்தவரும், முன்னாளில் போரில் விசயனின் வில்லடியைத் தலையில் பெற்றவரும் ஆகிய சிவபிரான் அகம்; முதிர்ந்த தவஒழுக்கமுடையவர்பால், சிறந்த துவாரகைக் கண்ணபிரானின் கருணை மிகுவதும், செறிந்த கூந்தலுடைய மகளிரின் கைவிரல்கள் செந்நிறமுடன் இரேகைபெற்றுக் கருணைமிகுந்து விளங்குவதுமாகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : முடிக்கு, அடிக்கு - உருபுமயக்கங்கள். செந்துவரை - பிரிமொழிச்சிலேடை

**90.** ஆறூ ரொலியும்மினார் வந்தோர்தேர்த் தட்டுமியல்
சீறூ ரரவமொக்கும் சிங்கையே - ஏறூர்வார்

முன்னகர மானார் முகைநெகிழும் முண்டகப்போ(து)
அன்னகர மானார் அகம்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : ஏறு ஊர்வார் முன் அகரம் ஆனார், முகைநெகிழும் முண்டகப்போது அன்ன கரம் ஆனார் அகம்; ஆறு ஊர் ஒலியும் சீறூர் அரவம் ஒக்கும் சிங்கை, மினார் வந்தோர் தேர்த்தட்டும் இயல் சீறுஊர் அரவம் ஒக்கும் சிங்கை.

**குறிப்புரை** : ஏறு ஊர்வார்= விடை ஏறிவருபவர் - சிவபிரான். முன்= எழுத்துவரிசையில் முன்னதான. அகரம் ஆனார்= அகரம்போல் உயிர்களுடன் ஒன்றாய் உடனாய் வேறாய் ஆனவர். முகை நெகிழும் முண்டகப்போது அன்ன= முகைப்பருவத்திலிருந்து மலரும் தாமரை மலர்போன்ற. கரம் ஆனார்= கையுடையவரான சிவபிரான். ஆறு ஊர் ஒலி= ஆறு பாய்ந்து செல்லும் ஒலி. சீறூர் அரவம் ஒக்கும்= சிறிய ஊரில் எழும் ஆரவாரம் ஒக்கும். மினார் வந்தோர் தேர்த்தட்டு= மின்னல்போல் வந்தமகளிரின் தேர்த்தட்டு - அல்குல். சீறு ஊர் அரவம் ஒக்கும்= படமெடுத்துச்சீறி ஊர்ந்து செல்லும் நாகம் ஒக்கும்.

**பொழிப்புரை** : விடைஏறி வருகிறவரும், எழுத்துவரிசையில் முன்னதாக உள்ள அகரம், பிற எழுத்துகளில், ஒன்றாய் உடனாய் வேறாய் இருந்து அவற்றை இயக்குவதுபோல், உயிர்களில் ஒன்றாய் உடனாய் வேறாய் இருந்து அவற்றை இயக்குகிறவரும், முகைப்பருவம் கழிய மலரும் தாமரைமலர் போன்ற அங்கையுடையவருமாகிய சிவபிரான் ஊர்; ஆறுபாய்ந்து செல்லும் ஒலி சிறிய ஊர்களில்எழும் ஒலிபோல் விளங்குவதும், மின்னல் போன்ற மகளிரின் தேர்த்தட்டு - அல்குல் - படமெடுத்துச் சீறிஊர்ந்து செல்லும் நாகம் ஒத்து விளங்குவதுமாகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : முன் அகரமானார் - விளக்கத்தை எனது
" அகரமுதல எழுத்தெல்லம்" உவமை விளக்கம் என்றகட்டுரையில் காண்க.

**இலக்கணக்குறிப்பு** : சீறூர் அரவம் _ பிரிமொழிச்சிலேடை

91. போதார் மலர்ப்பொழிலும் புத்தேளிர் ஆலயமும்
சீதாரி வாசமுறும் சிங்கையே - சாதாரி
விண்டவிசைப் பாணானார் வெங்கரசங் காரகோ
தண்டவிசைப் பாணானார் சார்பு.

**மடக்கை பிரிப்பு + கூட்டுமுறை** : சாதாரி விண்ட இசைப்பாண் ஆனார், வெங்கரன் சங்கார கோதண்ட விசை பாணானார் சார்பு; போதுஆர் மலர்ப்பொழிலும் சீதாரி வாசமுறும் சிங்கை; புத்தேளிர் ஆலயமும் சீதாரி வாசமுறும் சிங்கை.

**குறிப்புரை** : சாதாரி விண்ட இசைப்பாண் ஆனார்= ( பாணபத்திரர்க்காக ) சாதரிப்பண் இசைத்த பாணனாகவும் ஆனவர்; வெங் கர சங்கார= கொடியவனாகிய கரன் என்ற அசுரனைக்கொன்ற. கோதண்ட விசைப் பாண் ஆனார்= வில்லேந்தி வெற்றிபெற்றவர் ( அடியவர்க்குக் ) கீழானவரும் ஆனவர். போதுஆர் மலர்ப்பொழிலும்= மலர்களுடைய மலர்ச்சோலைகளிலும். சீதாரி வாசம் உறும் சிங்கை= செம்புளிச்சை மணக்கும் சிங்கை. புத்தேளிர் ஆலயமும் = கடவுளர் கோயில்களில். சீதாரி வாசமுறும் சிங்கை= ((தன்மார்பில்) திருமகள்வாழும் திருமால் எழுந்தருளியுள்ள சிங்கையாகும். ( சீ + தாரி= திருமகளைத் தரித்தவர் - திருமால் )

**பொழிப்புரை** : பாணபத்திரர்க்காகச் சாதாரிப்பண்பாடிய பாணன் ஆனவரும், கொடிய அசுரனாகிய கரன் என்பவனைக்கொன்ற வில்லேந்திவென்றவர் ( அடியவர்க்காக ) கீழானவரும் ஆன சிவபிரான் சார்ந்த ஊர்; மலர்களுடைய மலர்ச்சோலைகளில் செம்புளிச்சை மணப்பதும், கடவுளர் கோயில்களில் திருமகளை மார்பில்கொண்ட திருமால் எழுந்தருளியுள்ளதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சீதாரி - பிரிமொழிச்சிலேடை .

92. நாகரிக ரும்பொருநை நன்னதிநீர் வீசுமுத்தும்
சீகரமா மாலையொக்கும் சிங்கையே - ஏகர்
அநேக விதமுடையார் அன்புசெய்வார் தங்கள்
சிநேக விதமுடையார் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : ஏகர் அநேகவிதமுடையார், அன்புசெய்வார் தங்கள்சிநேக விதமுடையார் சேர்வு; நாகரிகரும் சீகர மாமாலை ஒக்கும் சிங்கை. பொருநை நன்னதிநீர் வீசுமுத்தும் சீகரமா மாலைஒக்கும் சிங்கை.

**குறிப்புரை** : ஏகர்= தன்னொப்பில்லார். அநேகவிதம் உடையார்= மிகப்பல விதமாகச் செயற்படுபவர். சிநேகவிதம் உடையார்= அன்பு கொண்டவர். நாகரிகர்= கண்ணோட்டமுடையவர். சீகர மாமாலை ஒக்கும்= இலட்மீகரமுடைய மேலான திருமால் ஒப்பர். முத்து சீகரம் மாமாலை ஒக்கும்= முத்துகள் இலட்மீகரத்தின் இயல்பை ஒக்கும் ( மாலை= இயல்பு )

**பொழிப்புரை** : தன்னொப்பில்லாதவரும், ஐந்தொழில்வழியே மிகப்பலவிதமாகச் செயற்படுகிறவரும், அன்புசெலுத்துகிறவர்கள்மேல் அன்புடையவரும் ஆகிய சிவபிரான் சேர்ந்துள்ள இடம்; கண்ணோட்டமுடையவர், இலட்சுமீகரமுடைய திருமாலை ஒத்துவாழ்வதும், பொருநையாகிய நன்னதியின் அலைகள் வீசும் முத்துகள் இலட்சுமீகரத்தின் இயல்பை ஒத்துவிளங்குவதுமாகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சீகரமா மாலை - பிரிமொழிச்சிலேடை.

93. பொன்னியலார் நெற்றியும்தென் புள்ளும் இசைதெரிவான்
சென்னியரைத் தண்மதிசேர் சிங்கையே _ உன்னிமனத்
தின்பாவம் மாற்றினான் எய்துகதி எய்தவணி
கன்பாவம் மாற்றினான் காப்பு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : உன்னி மனத்தின் பாவம் மாற்றினான், எய்து கதிஎய்த வணிகன் பாவம் மாற்றினான் காப்பு; பொன் இயலார் நெற்றியும் சென்னி சேர் அரை தண்மதி சேர் சிங்கை தென்புள்ளும் இசைதெரிவான் சென்னியரைத் தண்மதி சேர் சிங்கை,

**குறிப்புரை** : மனத்தின் பாவம் உன்னி மாற்றினான்= நினைப்பால் வரும்பாவங்களை எண்ணி அவற்றை மாற்றியவரும், எய்துகதி எய்த= அடையவேண்டிய சிறப்பை அடைய. வணிகன் பாவம் மாற்றினான்= தான்மணக்க விரும்பியவளுடன் திருமருகல் வந்து இறந்த வணிகனின் இறப்பைத் திருஞான சம்பந்தமூலம் எழுப்பித்தந்த சிவபிரான். பொன் இயலார் நெற்றி= திருமகள் ஒத்த மகளிரின் நெற்றி. சென்னி அரைத்தண்மதி சேர் சிங்கை= சிவபிரான் தலையில் சேர்ந்த பிறைஒத்ததும். தென்புள்ளும்= இசைக்கும் பறவை. சென்னியரைத் தண்மதி சேர் சிங்கை= சோழநாட்டைத் தண்ணிய அறிவால் ஆராய்ந்து சேரும் சிங்கையாகும்.

**பொழிப்புரை** : எனது நினைவால் வரும் பாவங்களை எண்ணிப்பார்த்து அவற்றை மாற்றியவனும், ( தான்மணக்கவிரும்பியவளுடன் திருமருகல்வந்த வணிகன் )அடையவேண்டிய சிறப்பை ( திருமணத்தை ) அடையும்பொருட்டு அவன்செய்த பாவத்தால் நேர்ந்த இறப்பை )திருஞானசம்பந்தர் மூலம் மாற்றியவனுமாகிய சிவபிரான் காக்குமிடம்; திருமகளின் இயல்பை ஒத்த மகளிரின் நெற்றி சிவபிரான் தலையைச்சேர்ந்த பிறைபோல் விளங்குவதும்; இனியகுரலுடைய குயில்போன்றவை மேலும்இசை கற்க. தண்ணிய அறிவால் ஆராய்ந்து சோழநாட்டை அடைவதுமாகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சென்னியரைத் தண்மதி : பிரிமொழிச்சிலேடை.

94. அக்கம் கறுத்தவர்கற் றைக்குழலில் புந்தியில்சேர்
சிக்கம் கறுத்துவிடும் சிங்கையே - மைக்கணம்போய்ச்
சாயுச்சி யம்தருவார் தண்பொருந்தத் தாரெனக்குச்
சாயுச்சி யம்தருவார் சார்பு.

**மடக்கடி பிரிப்பு + கொண்டு கூட்டு** : மைக்கணம் போய் சாய் உச்சியம் தருவார், தண்பொருந்தத் தார் எனக்குச் சாயுச்சியம் தருவார் சார்பு; அக்கம் கறுத்தவர் சிக்கு, கற்றைகுழலில் அறுத்துவிடும் சிங்கை; புந்தியில்சேர் சிக்கு அங்கு அறுத்துவிடும் சிங்கை.

**குறிப்புரை** : மைக்கணம் போய்ச் சாய் உச்சியம் தருவார்= மேகக் கூட்டம்போய்த் தங்கும் மலையுச்சி தருகிறவரும், தார் எனக்கு தண்பொருந்த= ஒழுங்குடைய எனக்குக் கருணை பொருந்த. சாயுச்சியம் தருவார்= சிவசாயுச்சியம் தருபவராகிய சிவபிரான். அங்கம் கறுத்தவர் சிக்கு= ஆன்மாவில் களங்கம் கொண்டவரின் சிக்கலை. கற்றைக்குழலில் அங்கு அறுத்துவிடும்= தொகுதியான கூந்தல் சிக்கினை நீக்குவது போல் அப்போதே களையும்.

**பொழிப்புரை** : மேகக்கூட்டம்போய்த் தங்க மலையுச்சி தருகிறவரும், ஒழுங்குடைய எனக்குக் கருணைபொருந்தச் சிவசாயுச்சியம் தருகிறவரும் ஆகிய சிவபிரான் சார்ந்தது, ஆன்மாவில் களங்கம் கொண்டவரின் சிக்கலை தொகுதியான கூந்தல் சிக்கலை நீக்குவதுபோல் நீக்குவதும், அறிவில் சேரும் சிக்குகளை அப்போதே அறுப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : சிவசாயுச்சியமாவது சிவத்துடன் இரண்டறக்கலத்தல்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி. சிக்கங் கறுத்துவிடும் -செம்மொழிச்சிலேடை

95. பார்த்திக் கிலிலுள்ள பலதலமும் முக்களவும்
சீர்த்திக் களவுபடும் சிங்கையே - மூர்த்திக்கு
மானமொழிந் தார்க்கு வடநிழல்கீழ் வந்திருந்து
ஞானமொழிந் தார்க்கு நகர்.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : மூர்த்திக்கு மானம் ஒழிந்தார்க்கு வடநிழல்கீழ் வந்திருந்து ஞானம் மொழிந்தார்க்கு நகர்; பார் திக்கிலுள்ள பலதலமும் சீர்த்திக்கு அளவுபடும் சிங்கை; முக்களவும் சீர்த்திக் களவுபடும் சிங்கை.

**குறிப்புரை** : மூர்த்திக்கு= தெய்வத்தன்மைக்காக. மானம் ஒழிந்தார்க்கு= ஆணவம் ஒழிந்த சனகாதி முனிவர்கட்கு. வடநிழல் வந்திருந்து ஞானம் மொழிந்தார்= கல்லாலின் கீழிருந்துஞானம்பற்றிக்கூறியவர் - சிவபிரான். பார் திக்கில் உள்ள பலதலமும்= உலகத்திசைகளில் உள்ள எல்லாத்தலங்களையும் காட்டிலும். சீர்த்திக்கு அளவாகும் சிங்கை= புகழுக்கு எல்லையாக விளங்கும் சிங்கை. முக்களவும்= மண்ணசை பொன்னாசை பெண்ணாசை ஆகிய மூன்று களவுகளும். சீர்த்திக் களவுபடும்= புகழை கவரும். .

**பொழிப்புரை** : தெய்வத்தன்மைபெற ஆணவம் ஒழிந்த சனகாதி முனிவர் நால்வருக்கும் கல்லாலின்கீழிருந்து ஞானம் உணர்த்தியவர் நகரம்; உலகத்திசைகளில் உள்ளஎல்லாத்தலங்களைக் காட்டிலும்புகழுக்கு எல்லையாக விளங்குவதும்; மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை ஆகிய மூன்றும் புகழைத் திருடுவனவாகும் என்றுகூறுவம் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்:** தெய்வத்தன்மைபெறச் சனகாதி நால்வர்க்குச் சொல்லாமல் சொல்லியவகை:

" மும்மலம் வேறுப்பட்டு ஒழிய மொய்த்துஉயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக்
கைம்மலர்க் காட்சியின் கதுவ நல்கிய
செம்மலை அலாதுஉளம் சிந்தி யாதுஅரோ " ( திருவானைக்காப் புராணம் )

**இலக்கணக்குறிப்பு :** சீர்த்திக் களவுபடும் - பிரிமொழிச்சிலேடை.

96. பேர்த்தண் தமிழ்வரையும் பேரறமும் சேர்ந்துகலி
தீர்த்தம் கொடுக்கும்இயல் சிங்கையே - ஊர்த்த
முயலும் நடத்தினார் மூதண்டத்(து) எல்லாச்
செயலும் நடத்தினார் சேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : ஊர்த்தம் முயலும் நடத்தினார், மூதண்டத்து எல்லாச்செயலும் நடத்தினார் சேர்வு; பேர்த்தண் தமிழ்வரையும் தீர்த்தம் கொடுக்கும் இயல் சிங்கை. பேரறமும் தீர்த்தம் கொடுக்கும் இயல் சிங்கை.

**குறிப்புரை** : ஊர்த்தம்= ஊர்த்துவதாண்டவத்தில். முயலும் நடத்தினார்= முயலகனையும் வழிப்படுத்தினார். எல்லாச்செயலும்= ஐந்து செயல்களையும். பேர்த்தண் தமிழ்வரை= புகழ்வாய்ந்த தண்ணியபொதிகை மலை. தீர்த்தம்= பொருநை நீர். கலிதீர்த்து அம் கொடுக்கும் சிங்கை= துன்பம் தீர்த்து அழகு தரும் இயல்புடைய சிங்கை.

**பொழிப்புரை** : ஊர்த்துவ தாண்டவத்தின் போதும் முயலகனாம் ஆணவத்தை வழிப்படுத்தியவரும், தொன்மையான அண்டத்தில் படைத்தல் முதலிய ஐந்தையும் நடத்துகிறவரும் ஆகிய சிவபிரான் சேர்ந்தது, புகழ்வாய்ந்த தண்ணிய பொதிகைமலை, பொருநையின்மூலம் தண்ணீர் வழங்குவதும், சிறந்த அறங்கள் சேர்ந்து துன்பம் தீர்த்து அழகு தருவதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : கைதீர்த்தம் கொடுக்கும் - பிரிமொழிச்சிலேடை.

97. காப்புவளைக் கையாரும் காலமடைக் குள்வளையும்
சீப்பினள கம்செறிக்கும் சிங்கையே - கோப்புமுறைக்
குஞ்சித் தாளார் கொடும்பா தகக்குடியை
வஞ்சிதத் தாளார் மனை.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : கோப்புமுறைக் குஞ்சித்தாளார், கொடும்பாதகர்குடியை வஞ்சு இதத்து ஆளார் மனை; காப்புவளைக் கையாரும் சீப்பின் அளகம் செறிக்கும் சிங்கை.; காலவளைக்குள் மடையும் சீப்பின் அள் அளகம் செறிக்கும் சிங்கை. ஆளாதவரும் ஆகிய சிவபிரான் றிக்கும் சிங்கையே.

**குறிப்புரை** : கோப்புமுறை= பெருமைக்குரியவகையில். குஞ்சித்தாளார்- தூக்கிய திருவடியினர். கொடும்பாதகர் குடியை வஞ்சு இதத்து ஆளார் மனை= கொடியபாதகம் செய்தவர் குடியை வைது பக்குவமாக ஆளாதவர் - சிவபிரான். காப்பு வளைக்கையார்= காப்பும் வளையலும் அணிந்த மகளிர். சீப்பின் அளகம் செறிக்கும் சிங்கை= சீப்பினால் தம்கூந்தலைப் படியச்செய்யும் சிங்கை. கால வளைக்குள். மடையும் சீப்பின் அடைக்கும் சிங்கை= குறித்த காலஎல்லைக்குள் மதகினை மதகுஅடைக்கும்பலகையால் அடைக்கும் சிங்கை.

**பொழிப்புரை** : பெருமைக்குரிய வகையில் தூக்கிய திருவடியினரும், கொடிய பாதகம் செய்தவர் குடியை வைது பக்குவமாக ஆளாதவருமாகிய சிவபிரானின் இருப்பிடம்; காப்பும் வளையலும் அணிந்த மகளிர் சீப்பினால் தம் கூந்தலைப் படியச்செய்வதும், குறித்த காலஎல்லைக்குள் மத்தை மதகடைக்கும் பலகையால் அடைப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**விளக்கம்** : காப்பு வளைக்கையார் என்றதால் மங்கலமகளிரையும், குஞ்சிதாள் என்றதால் வளைத்துத் தூக்கிய அருளும் திருவடியையும் குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : சீப்பினள கம்செறிக்கும் - பிரிமொழிச்சிலேடை.

98. காப்பாயர் தோளிணையும் காந்தளில்வீழ் வண்டினமும்
சேப்பாய் மருப்பொசிக்கும் சிங்கையே - காப்பாய
சற்பப் படலையார் தம்படிவ மாம்பவள
வெற்பப் படலையார் வீடு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : காப்புஆய சற்பப் படலையார் , தம்படிவமாம் பவளவெற்பப் படலையார் வீடு; காப்புஆயர் தோளிணையும் சேப்பாய் மருப்பு ஒசிக்கும் சிங்கை; காந்தளில் வீழ் வண்டினமும் சே பாய் மருப்பு ஒசிக்கும் சிங்கை.

**குறிப்புரை** : காப்பாய சற்பப் படலையார்=உயிர்களைக் காக்கும் பொருட்டு நாகங்களை மாலையாக அணிந்தவர், தம் படிவமாம் பவளவெற்பப் படலையார்= தமது வடிவமாகிய பவள மலையாக ( அண்டம் எல்லாம் ) பரவியுள்ளவர். காப்பு ஆயர்= ஆனினம் காக்கும் ஆயர்கள். தோள் இணை= இரு தோள்களும். பாய் சே மருப்பு ஒசிக்கும்= பாய்ந்துவரும் காளையின் கொம்பினை ஒடிக்கும். காந்தளில் வீழ் வண்டினம்= காந்தள் மலரை ஒதுக்கிய வண்டின் கூட்டம். சேப்பாய் மருப்பு ஒசிக்கும் = அழிஞ்சில் மரத்தில் மொய்த்து மரக்கொம்பை வளைக்கும்.

**பொழிப்புரை** : உயிர்ளைக் காக்கும்பொருட்டு நாகங்களை மாலையாக அணிந்தவரும், தமது திருஉருவாகிய செந்நிறப்பவளம்ஒத்த மலையாக அண்டம் எங்கும் பரவியுள்ளவரும் ஆகிய சிவபிரான் வீடு; ஆனினம் காக்கும் ஆயர்களின் இருதோள்களும் பாய்ந்துவரும் காளையின் கொம்பினை ஒடிப்பதும், காந்தள் மலரை ஒதுக்கிய வண்டினம் அழிஞ்சில் மரக்கிளைகளில் மொய்த்து அக்கொம்புகளை வளைப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சேப்பாய் மருப்பு ஒசிக்கும் : செம்மொழிச்சிலேடை.

99. குத்திரத்தில் வாசவரும் கோமளப்பூங் கோதையரும்
சித்திரத்தை யாய்உலவும் சிங்கையே - பத்தநினை
பஞ்சக் கரக்(கு)அளவாய் பாலோன் பரிந்துரையா
நெஞ்சக் கரக்களவன் நேர்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டு முறை** : பத்தர் நினை பஞ்சஅக்கரக்கு அளவா, பாலோன் பரிந்துரையா நெஞ்ச கரக் களவன் காப்பு; குத்திரத்தில் வாசவர் சித்திரத்தையாய் உலவும் சிங்கை; கோமளப்பூங் கோதையர் சித்திரத்தை ஆய்வு உலவும் சிங்கை.

**குறிப்புரை** : பத்தர்நினை= பத்திமையர் நினைக்கும்.பஞ்சக்கரக்கு திருவைந்தெழுத்தின் எல்லையாய், பாலோன் பரிந்துரையா= பண்பாளர் பரிந்துரைத்த. நெஞ்சக் கரக் களவன் நேர்வு= மனத்தில் மறைந்துள்ள கள்வன் பொருந்தியுள்ள இடம். குத்த்ரத்தில் வாசவர்= மலைக்கண் வாழ்வோர். சித்தரத்தையாய் உலவும்=

புகழுடையவராய் உலவுவதும். கோமளப்பூங் கோதையர்= அழகிய பூப்போன்ற மகளிர். சித்திரத்தை ஆய் உலவும் சிங்கை= சித்திரகவியை ஆராய்ந்து உலவுவதும் ஆகிய சிங்கையாகும்.

**பொழிப்புரை** : பத்திமையுடடையவர்நினைக்கின்றதிருவைந்தெழுத்தின்எல்லையாய்,பண்பாளர் பரிந்துரைத்த நெஞ்சம்கவர் கள்வன் பொருந்திய இடம்; மலைக்கண்வாழ்வோர் புகழுடையவராய் வாழ்வதும், அழகும் மென்மையும் உடைய மகளிர் சித்திரகவியை ஆராய்வதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சித்திரத்தையாய் = பிரிமொழிச்சிலேடை.

100. பாண்டிக் குலவலியால் பல்கடவுள் ஆலயத்தில்
சேண்டிக் குரனவிலும் சிங்கையே - வேண்டிஎனை
ஆழி மலையவெற்பர் ஆக்கைஎடா(து) ஆண்டுகொண்ட
வாழி மலையவெற்பர் வாழ்வு.

**மடக்கடி பிரிப்பு + கூட்டுமுறை** : எனைவேண்டி ஆழிமலையவெற்பர், ஆக்கைஎடாதுஆண்டுகொண்ட வாழிமலைய வெற்பர் வாழ்வு; பாண்டிக்குல வலியால் சேண் திக்கு உரன்நவிலும் சிங்கை. பல்கடவுள் ஆலயத்தில் சேண்டிக்குரல் நவிலும் சிங்கை.

**குறிப்புரை =** எனை வேண்டி ஆழி மலைய வெற்பர்= என்னை விரும்பி ஆள்கிறவராகிய பொதிகை மலையரும், நான் உடம்பெடாது ஆண்டுகொண்ட மலையவெற்பர் - பிறவாது ஆண்டுகொண்டபொதிகையர். வாழ்வு= வாழிடம்; பாண்டிக் குலவலியால்= பாண்டியமன்னர்களின் குலவலிமைகாரணமாக.சேண் திக்கு உரன் நவிலும்= அவர்களின் வலிமையை நெடுந்தொலிவு பேசுவதும், பல கடவுள் ஆலயத்தில்=பலகடவுளர் வாழும் ஆலயங்களில்.சேண்டிக் குரல் நவிலும் சிங்கை= சேண்டி ஒலிப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**பொழிப்புரை** : என்னை விரும்பி ஆள்கிறவராகிய பொதிகை மலையினரும், மீண்டும் நான் பிறவி எடுக்காது என்னை வாழ்விப்பவருமாக விளங்குகிற **பாவநாசப் பொதிகைமலைப் பெருமான் ஆகிய அருள்தரு உலகாம்பிகை உடனாய கல்யாண சுந்தரனார்** வாழுமிடம் பாண்டிய மன்னர்களின் குலவலிமையால் நெடுந்திசை எங்கும் அவர்களின் வலிமை பேசுவதும், பலகடவுளர் எழுந்தருளியுள்ள ஆலயங்களி எல்லாம் சேண்டி ஒலிப்பதும் ஆகிய சிங்கையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : சேண்டிக் குரனவிலும் : பிரிமொழிச்சிலேடை.

திருச்சிற்றம்பலம்